# ஆலயமணி

ஆசிரியர் : புலவர் ஈழத்துச்சிவானந்தன்





போதொடு நீர் சுமந்து ஏத்தி
புகுவார் அவர்பின் புகுவேன்

$ 2.00

# ஆலயமணி

ஆசிரியர் — புலவர் ஈழத்துச்சிவானந்தன்
கனடா பதிப்பாசிரியர்— சிவ. சிவமோகன்



***390 Dawes Road***
***# 1211 Toronto***
***M4B 2E5***
***Canada***

# ஆலயமணியின்

## ஆலோசனை அமைச்சு

சட்டஆலோசகர் :- சட்டத்தரணி எஸ். கே. மகேந்திரன் M. A

ஆலோசகர்கள் :-

சோ. செந்தில்முருகன்
S. R. தாகூர்
த. மாணிக்கவாசகர் (நாதன்)
இரா. கந்தசாமி

இரஞ்சினி சண்முகலிங்கம்
பத்மா பேரின்பநாதன்
அன்னலஷ்மி வடிவேலு

சு. குணரெத்தினம் e. o.
இந்திராதேவி இரத்தினசிங்கம்
விமலநாயகி சிவானந்தன்

சண். சதாசிவம்
சோம. சச்சிதானந்தன்
நவமணி சிவபாதன்

நா. சிவராஜசிங்கம்
மீனா தவரட்ணம்
சிவ - திருவருள்!

இலண்டன் (UK) தொடர்பாளர்
தயா — றாஜூ
Tel.: 44816777977

யேர்மனி தொடர்பாளர்
சோ. அரவிந்தகோஸ்
(மகாமாரியம்மன் ஆலயம்)
Tel.: 4968143223


கனடா பதிப்புரிமை :- சிவ - சிவமோகன்

அச்சமைப்பு :- அபிராமி அச்சகம் -1994



**390 Dawes Road**
**# 1211 Toronto Ontario**
**M4B 2E5**
**Canada**
**Tel.: (416) 757-7062**

# கனடாவில் நடந்த "ஆலயமணி"
## வெளியீட்டுவிழாவில் பாடிய
# வாழ்த்துப் பா.

**வணக்கம்**

சுற்றிய சூழல் வாழ்க சுமைதாங்கும் தலைவர் வாழ்க
பற்றிய கவிஅறிஞர் வாழ்க பரந்தபெரும் கனடாமக்கள் வாழ்க
முற்றிய முத்தமிழ் வித்தகர் ஈழத்துச்சிவானந்தன் வாழ்க
ஏற்றிய எம்ஈழமக்கள் என்றும் இன்பமுடன் வாழ்க வாழ்கவே

இலங்கைத்தீவை அறிந்துகொண்டீர்
ஏன் ஈழம் இருப்பதுவும் தெரியலையோ—அங்கு
காலைக்கதிரவன் பள்ளிகொள்ளும் கார்முகில் செறிந்திட்ட கடல்களுண்டு
ஈழம் பெற்றெடுத்தாள் ஏழுதீவை என்றும் அவளுக்கோர் குறையுமில்லை

ஈழத்தின் இதயம்தான் புங்கைநகர் இதை
என்றும் கூறிடுவார் சிங்களவர்— இப்போ
காலத்தின் கொடுமையினால் கலங்குகின்றோம் ஞாலம்
இதை உணர்த்திடட்டும் நாம் என் செய்வோம்
வீடு வாசல் விட்டெல்லாம் இங்கு வந்தோம் வெறும்
விமர்சனங்கள் செய்து நாம் என்ன காண்போம்
நம்நாடு நமக்கு என்றும் வேண்டுமென்றால் நாம் தமிழர்
ஒற்றுமையாய் வாழவேண்டும்

ஈழத்தில் பிறந்தவர் தான் சிவானந்தம்
என்றும் இவர் புகழ் முழங்குதுகாண் பாரெங்கும்
ஞாலத்தில் வல்லவர்கள் பலருண்டு நாம்
கேட்ட புலவர்களுள் இவர்க்கேது —ஈடு இன்று.
காலங்கள் பலகோடி கடக்கின்றது
கண்ணான புலவர்களும் மறைந்துவிட்டார்
மாயமோ மனிதகோலம் இன்னும் இங்கு மறையவில்லை
மார்புதட்டிக் கதைத்தும் ஒரு பயனும் இல்லை

சிவானந்தன் சிவத்தொண்டு பலபுரிந்தார்
சீமையெங்கும் சிவன் ஒன்றே தெய்வமென்றார்
ஆனந்தம் ஆனந்தம் அவர் குடும்பம்
அவைக்களத்தும் அவர்கள் புகழ் குறையவில்லை
தேனினிமை கொண்ட தென்றோ அவரின் சொற்கள்

தெவிட்டாத செந்தமிழை நன்கு கற்றார் — ஏன்
உதித்தார் இத்தவப்புதல்வர் எங்கள் முன்னே
எம்நாடு செய்த நற்பயனே என்று சொல்வோம்

குடும்பமென்றால் ஒரு குறிக்கோளில் வாழவேண்டும்
கொடியவர்கள் வாழும் இவ்வையகத்தில்
நெறிதவறா வாழ்க்கையினை வாழ்ந்து காட்டும்
பெரியதொரு குடும்பப்பண்பு இவர்கட்குண்டு
சுற்றாடல் எவையெனினும் சோரவில்லை
ஆண்டவனும் அவர்க்கிணையாய் ஆண்டு வந்தார்
கல்விகற்று கற்றதனைக் கடைப்பிடித்து
கவிகளிலோ புவியியல்களிலோ ஏன் கலை ஆசான்களாய்
வைத்தியராய் வழிகாட்டும் வான்மறை வேதங்ளிலோ
தர்மபோதனைகளிலோ சலியாது உழைத்து நின்ற நிற்கும்
இப்பெரியார்கள் வாழ்க்கையினை வாழ்ந்து காட்ட நாமும் முயல்வோம்

அரசன் எவ்வழி குடிகளும் அவ்வழி என்பதோர் முதுமொழி அதுவே
தந்தை எவ்வழி தனயனும் அவ்வழி சான்றோர் புகழ்ந்திட வந்தார்
விந்தையாம் இவர்வழி விளையும் பயிரென கல்வி வேளையில் பயின்றவராய்
முந்தைய தலைமுறை செய்தவம் பலித்ததோ முருகன் தேர்விழாப் பங்குடையவர்
கந்தையாகிலும் கசக்கி கட்டென்ற கோளுக்கு கட்டுண்டு வாழ்ந்து வந்தார்
எந்தாயாம் தமிழ்மொழி என்றென்றும் வாழவே இவர் இங்கும் வந்து கொண்டார்

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு என்றார் தெய்வப்புலவர் திருவள்ளுவர்
இச்சொற்கள் எல்லார்க்கும் எஞ்ஞான்றும் இருந்தால் தான் நாம் மனிதர்

பொய்ச்சொற்கள் கூறி இங்கு புகழுடனே வாழுகின்றோம் என்பதனால் பயனேஇல்லை
மெய்ச்சொற்கள் எதுவானால் நம்பெற்ற மண்ணை மறவாது பேசும் தமிழ் கற்றிடவே பழகிக் கொள்வேம்
வாழ்க புலவர் புகழ் வளர்க அவர் கல்வி! வாழிய வாழியவே!

***சுபம் சுபம் சுபம்***

இங்ஙனம்
அன்புள்ள
***சி. க. நல்லையூரன்***
(புங்குடுதீவு)
கனடா

# *Message from Mr. K. Venkataraman.*

Greetings and congratulatory message from Mr. K. Venkataraman, President of the Canadian Council of Hindus on the occasion of the release of the canadian edition of "ALAYAMANI" in toronto on sunday, September 18, 1994. This magazine, which deals essentially with various Aspefts of hindu religion, should be of special interest to our younger generations as it is expected to disseminate information on religion that they wish to know and understand.

Canadian council of hindus is proud to be part of these deliberations and extends its hands of friendship and partnership in this new venture. As you all know, the religious magazine "HINDU DHARMA" is run through the canadian council of hindus and it is possible that we can have reciprocal arrangements in the publication aspects.

***Presented and read***
***by Ramamani***
***(of behalf of Venkataraman.)***

உ

# அறுகரிசி போடும்போது

## காலில் இருந்து ஆரம்பிக்கலாமா?

*— மானியூர் — சி. குமாரசாமி*

சைவசமயச் சம்பிரதாயங்களை. பாரம்பரியங்களைக் கைக் கொள்ளாமல் விடுவதும். பிழையாகச் செயலாற்றுவதும் அறியாமையினாலா? அன்றி அலட்சியமான போக்கினாலா? எல்லோரும்தத்தமது இன சமய ஆதாரங்களை பேணவேண்டுமென உன்னிப்பாகப் பிரசாரங்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கும் வேளையில் நாம் எமது பாரம்பரியங்களைக் கைவிடலாமா?

சில அவதானிப்புக்கள் எமது கலாசாரத்தினை அடுத்த சந்ததியினருக்கு வழங்க உதவின. அடுத்த சந்ததியாருக்கு மட்டுமல்ல இன்றைய சந்ததியாருக்கும் இது பயனுள்ளதாகவேயிருக்கும்.

ஒரு சைவத்திருமணத்திற்கு அழைப்புக் கிடைத்துப் போயிருந்தேன் முதலில் என் கண்ணில் பட்டது தோரணங்கள். மாவிலைத் தோரணம் தவறாகப் போடப்பட்டிருந்தது. அது போடப்படவேண்டிய விதம் மாவிலையின் உட்புறம் வெளியெ நிற்கும் படியும் இலையின் காம்பு உட்பக்கம் நிற்கும் படியும் ஆகும் தென்னோலைத் தோரணம் மூன்று இதழ் வைத்துப் போடப்பட்டிருந்தது. நற்கருமங்களுக்கு ஐந்து இதழாவது ஏழு இதழாவது வைத்து தோரணம் போடப்படவேண்டும்

மணவறை கிழக்கு நோக்கியிருக்கவேண்டும் ஆனால் அது வடக்கு நோக்கி இருந்தது. அங்கு நின்ற சில பெரியோர்களைக் கேட்டேன். அவர்கள் எப்படி இருந்தாலும் என்ன? என்றார்கள்.

மணமகன் வரும்போது கவனித்தேன் உத்தரியத்தை வலப்புறத் தோளில் இட்டுவந்தார் இது தவளானது உத்தரியம் இடது புறத்

தோளில் போட்டு வலப்புறமாக்கப் படல் வேண்டும். பூண்நூல் இடுவது போலவே உத்தரியமும் போடவேண்டும். சிறிதுநேரத்தில் மூன்று சுமங்கலிப் பெண்களை அழைத்து பாலிகை இடப்பட்டது பாலிகை இடுவது வித்துக்கள் முளைப்பதற்காகவே ஆலயத்தில் திருமணம் நடைபெறும் போது பாலிகை இட்ட பாத்திரத்தை யாரும் ஆண் வீடு கொண்டுபோய் அவ்விதைகளை முளைக்கப் போடுவதில்லை. அது தவறாகும் பாலிகையை மணமகள் வீட்டிற்குக் கொண்டுசென்று முளைக்கப் போடுதலே முறைமையாகும்.

பாலிகை இடச்சென்ற சுமங்கலிப் பெண்கள் கூந்தலை முடிக்காமல் தலை விரிகோலமாய் நின்று பாலிகை இடும்போது குத்து விளக்கின் சுடர் தலை முடியில் பட்டு விட்டதை அவதானிக்க முடிந்தது. மங்களகருமங்கள் செய்வோர் தலைவிரிகோலமாய் நிற்பதைத் தவிர்க்கலாம் மல்லவா? மேலும் கூந்தலில் நெருப்புப் பற்றினால் அபசகுணம் அல்லவா?

மணமக்களை சிவாச்சாரியார் ஆசீர்வதிக்கும் போது குங்குமம் கலந்த அரிசியை மணமக்களின் தலையில் சொரிந்தே வாழ்த்துகிறார். இதைப்போலவே நாமும் வாழ்த்த வேண்டும். காலில் இருந்து தலைவரையும் அரிசியை சொரிதல் அமங்கல காரியத்தை நினைவு படுத்துகிறது பிரேதத்திற்குத்தான் காலில் இருந்து தலைவரை அரிசியால் குளிப்பாட்டுகிறோமல்லவா?

ஆராத்தி எடுக்கும்போது வலஞ்சுழியாகவே — அதாவது மணிக்கூட்டு முள்சுற்றும் திசையிலேயே ஆராத்தி எடுத்தல் வேண்டும் ஆசீர்வாதம் பண்ணவோ ஆராத்தி எடுக்கவோ மணமக்களுக்குப் பக்கத்தில் போகும் போது காலணிகளோடு போகக்கூடாது மணமக்களும் சிவாச்சாரி யார்களும் இருக்குமிடத்தில் இறைவன் திருவருள் பொழிய வந்து நிற்பான். இறைவன் வந்து நிற்கும் இடத்திற்கு காலணியோடு போகலாமா? போகக்கூடாது.

*முன்இதழ் தொடர்.........!*

# கனடாவில் சைவசமயம்

— கவிஞர் .வி. கந்தவனம்

## (7) சமுதாயப் பணி

எமது சமயம் சமுதாயப் பணியுடன் இணைந்ததொன்று. சேக்கிழார் பெருமான் திருத் தொண்டர்கள் ஆற்றிய சமுதாயப் பணிகளை பெரிய புராணத்திலே சிறப்புற விளக்கிக் காட்டுகின்றார்.

வாக்கின் வேந்தர் நாமத்தால் 'படிநிகழ் மடங்கள் தண்ணீர்ப் பந்தர்கள் முதலாயுள்ள முடிவிலா அறங்கள் செய்த' அப்பூதியடிகள், அடியவர்க்கு அமுது செய்வித்து ஆடைகளும் உதவிய செல்வந்தர் அமர்நீதி நாயனார், அடியார்க்கு அமுதும் பொருளும் தந்த சிறப்புலி நாயனார், பிறவிக் குருடராயிருந்தும் திருக்குளப்பணி செய்த தண்டியடிகள், அடியார்கள் துணி தோய்த்துலர்த்திய திருக்குறிப்புத் தொண்ட நாயனார், உழவாரங் கொண்டு பெருந்திருத் தொண்டு செய்த திருநாவுக்கரசு சுவாமிகள், சிவனடியார்களுக்கு வஸ்திர தானம் செய்து மகிழ்ந்த நேச நாயனார் போன்றோரது வரலாறுகளடியார்கள் ஆற்றிய சமுதாயப் பணிகளை எடுத்து விளங்குகின்றன.

தமிழ் நாட்டில் பல ஆதீனங்களும் மடங்களும் பலவகையான சமூகப் பணிகளில் ஈடுபட்டு வருவதை யாவரும் அறிவர். ஈழநாட்டில் துர்க்காதுரந்தரி பண்டிதை செல்வி தங்கம்மா அப்பாக்குட்டி அவர்களும் அமெரிக்காவில் குருதேவர் சிவாய சுப்பிரமணிய சுவாமிகளும் சமயப் பணியுடன் பொதுப்பணிகள் பலவற்றிலும் ஈடுபட்டுச் சமுதாய நலனைப் பேணிவருகின்றனர்.

கனடாவில் பிற சமயத் தாபனங்கள் செய்துவரும் சமூகப் பணிகள் அளப்பரியன. கத்தோலிக்க நிறுவனங்களும் இரட்சணிய சேனை இயக்கமும் ஆற்றிவரும் பணிகள் உலகளாவி நிற்பன. குறிப்பாக அகதிகளுக்குக் கத்தோலிக்க நிறுவனங்கள் செய்து வரும் பணிகளால் சைவத் தமிழரும் பயனடைந்துள்ளனர்.

அந்தரப்பட்டு வரும் தமிழ் அகதிகளுக்குத் தற்காலிக புகலிடம்

வழங்குதல், அரச உதவிகளைப் பெற உதவுதல், ஆலோசனைகள் வழங்குதல், சட்டத்தரணிகளை ஒழுங்குசெய்து கொடுத்தல், குடும்பத் தகராறுகளைச் சுமுகமாகத் தீர்த்து வைத்தல், உளவியற் சிக்கல்களுக்கான சிகிச்சைகள் ஆலோசனைகள் அளித்தல், சமுதாய ஊழல்களையும் குற்றச் செயல்களையும் குறைக்கும் அல்லது முற்றாக நீக்கும் வகை செய்தல் போன்றனவும் பிறவுமாகிய பாரிய பணிகளில் எமது சைவ நிறுவனங்கள் தாபன ரீதியில் ஈடுபட முடியாத நிலையில் இருக்கின்றன.

இதற்கான முக்கிய காரணங்களாக இரண்டினைக் கூறலாம். ஒன்று, சைவ நிறுவனங்கள் வளரும் நிலையில் இருக்கும் தன்மை. மற்றையது, போதிய பொருளாதார வசதிகள் இன்மை. குறிப்பாகக் கோயில் கட்டிமுடிக்கும் திருப்பணிகளிலேயே பல தாபனங்களின் கவனம் இப்பொழுது இருந்துவருகின்றது. இப்பாரிய பணி முட்டின்றி முடிவுற்றக்கால் சமுதாயப் பணிகள் பற்றியும் இவை சிந்திக்கத் தொடங்கும் என்பது உறுதி.

## *(8) சைவ சமய பீடம்*

வருடப்பிறப்பு, விரத அனுட்டானங்கள், நன்னிமித்தங்கள் முதலாய பொது விடயங்களில் வெவ்வேறான காலநேரங்களைக் கோயில்கள் பின்பற்றி வருவதனால், சைவத் தமிழர்கள் மத்தியில் குழப்பமும் ஒற்றுமையீனமும் சைவ அனுட்டானங்களில் நம்பிக்கையீனமும் ஏற்பட்டு வருகின்றன. இவற்றுக்குரிய பிரதான காரணம் கோயில்கள் வெவ்வேறு பஞ்சாங்கங்களைப் பின்பற்றுவதேயாகும். இவ்விடயத்தில் சைவசமய நிறுவனங்கள் ஒன்றுசேர்ந்து ஒரு முடிவை விசைவாக எடுப்பது சமய வளர்ச்சிக்கு அவசியமாகின்றது. இதுபற்றி ஏற்கனவே பல அறிஞர்கள் குரல் கொடுத்திருக்கின்றார்கள்(10)

மாகாண மட்டத்திலாவது சைவ சமயபீடம் ஒன்றை உருவாக்கி, வாக்கிய கணித பஞ்சாங்கங்கள் தோற்றுவிக்கும் குழப்பத்தைத் தீர்த்தல், கனடியச் சூழல், வாழ்க்கை முறை என்பவற்றுக்குத்தக பூசை முறைகளிற் பொருத்தமான மாற்றங்களை ஏற்படுத்தல், சமயத்தவர் பிற சமயங்களைத் தழுவுதற்கான காரணங்களைக் கண்டறிந்து, அதனைத் தடுப்பதற்குரிய வழிவகைகளை எடுத்தல், சைவ இளைஞர் தொண்டர் அணி ஒன்றினை அமைத்தல் போன்றவை பற்றியும் மேலே

முன்வைக்கப்பட்ட இறைபத்தியை வளர்த்தல், சமுதாய நலன் பேணல் முதலியவைபற்றியும் ஒற்றுமையுடன் நடவடிக்கைகள் எடுப்பின் கனடாவில் சைவ சமயம் மேலும் வளர்ந்தோங்கும் என்பதில் ஐயமில்லை..

## (9) தொகுப்புரை

இறுகாறும் கூறியவற்றால் கனடாவில் கடந்த பதினைந்து வருடங்களாக ஒன்ராறியோ, கியூபெக், அல்பேட்டா ஆகிய மாகாணங்களிற் சைவத் தமிழ்ப் பெருமக்கள் சைவ சமயத்தை வளர்க்கத் தம்மாலியன்ற முயற்சிகள் எடுத்து வருகிறார்கள் என்பதும், அத்தகைய முயற்சிகளுக்குச் சாதகமாக இருக்கும் காரணங்களுள் கனடிய அரசாங்கத்தின் பல்கலாச்சாரக் கொள்கையும் பிரதானமான தொன்று என்பதும், நிரந்தரமாகக் கோயில் கட்டும் பணியிலேயே சமய நிறுவனங்கள் இப்பொழுது கவனம் செலுத்தி வருகின்றன என்பதும், கோயில் நிர்வாகம் சைவ மக்கள் மத்தியில் பக்தியை வளர்க்கும் வகையில் நடைபெறுவதோடு சமய அறிவைப் புகட்டும் பணிகளிலும் பலன் தரும் சமுதாயப் பணிகளிலும் ஈடுபடுதல் வேண்டும் என்பதும், எல்லாச் சைவ சமய நிறுவனங்களும் இணைந்து ஒரு சைவ சமய பீடம் அமைந்து அதன் மூலம் சைவ சமயத்தவர் மத்தியில் ஒற்றுமையையும் சைவத்தில் நம்பிக்கையையும் வளர்க்கும் பணிகளை மேற்கொள்ளின் சைவ சமயம் கனடாவில் மேலும் வளர்ச்சிபெறும் என்பதும் எடுத்துக் காட்டப் பெற்றன.

இக் கட்டுரையிலே சைவ சமய வழிபாடு தொடர்பாகக் கனடாவிலே மேற்கொள்ளப்பட்டு வரும் ஆக்கபூர்வமான முயற்சிகள் யாதேனும் விடுபட்டிருப்பின், உரியவர்கள் கட்டுரை ஆசிரியருடன் தொடர்புகொண்டு வேண்டிய தகவல்கலைத் தந்துதவுமாறு தயவாகக் கேட்டுக்கொள்ளப் படுகின்றனர்.



வழங்குதல், அரச உதவிகளைப் பெற உதவுதல், ஆலோசனைகள் வழங்குதல், சட்டத்தரணிகளை ஒழுங்குசெய்து கொடுத்தல், குடும்பத் தகராறுகளைச் சுமுகமாகத் தீர்த்து வைத்தல், உளவியற் சிக்கல்களுக்கான சிகிச்சைகள் ஆலோசனைகள் அளித்தல், சமுதாய உழல்களையும் குற்றச் செயல்களையும் குறைக்கும் அல்லது முற்றாக நீக்கும் வகை செய்தல் போன்றனவும் பிறவுமாகிய பாரிய பணிகளில் எமது சைவ நிறுவனங்கள் தாபன ரீதியில் ஈடுபட முடியாத நிலையில் இருக்கின்றன.

இதற்கான முக்கிய காரணங்களாக இரண்டினைக் கூறலாம். ஒன்று, சைவ நிறுவனங்கள் வளரும் நிலையில் இருக்கும் தன்மை. மற்றையது, போதிய பொருளாதார வசதிகள் இன்மை. குறிப்பாகக் கோயில் கட்டிமுடிக்கும் திருப்பணிகளிலேயே பல தாபனங்களின் கவனம் இப்பொழுது இருந்துவருகின்றது. இப்பாரிய பணி முட்டின்றி முடிவுற்றக்கால் சமுதாயப் பணிகள் பற்றியும் இவை சிந்திக்கத் தொடங்கும் என்பது உறுதி.

## (8) சைவ சமய பீடம்

வருடப்பிறப்பு, விரத அனுட்டானங்கள், நன்னிமித்தங்கள் முதலாய பொது விடயங்களில் வெவ்வேறான காலநேரங்களைக் கோயில்கள் பின்பற்றி வருவதனால், சைவத் தமிழர்கள் மத்தியில் குழப்பமும் ஒற்றுமையீனமும் சைவ அனுட்டானங்களில் நம்பிக்கையீனமும் ஏற்பட்டு வருகின்றன. இவற்றுக்குரிய பிரதான காரணம் கோயில்கள் வெவ்வேறு பஞ்சாங்கங்களைப் பின்பற்றுவதேயாகும். இவ்விடயத்தில் சைவசமய நிறுவனங்கள் ஒன்றுசேர்ந்து ஒரு முடிவை விசைவாக எடுப்பது சமய வளர்ச்சிக்கு அவசியமாகின்றது. இதுபற்றி ஏற்கனவே பல அறிஞர்கள் குரல் கொடுத்திருக்கின்றார்கள்(10)

மாகாண மட்டத்திலாவது சைவ சமயபீடம் ஒன்றை உருவாக்கி, வாக்கிய கணித பஞ்சாங்கங்கள் தோற்றுவிக்கும் குழப்பத்தைத் தீர்த்தல், கனடியச் சூழல், வாழ்க்கை முறை என்பவற்றுக்குத்தக பூசை முறைகளிற் பொருத்தமான மாற்றங்களை ஏற்படுத்தல், சமயத்தவர் பிற சமயங்களைத் தழுவுதற்கான காரணங்களைக் கண்டறிந்து, அதனைத் தடுப்பதற்குரிய வழிவகைகளை எடுத்தல், சைவ இளைஞர் தொண்டர் அணி ஒன்றினை அமைத்தல் போன்றவை பற்றியும் மேலே

# அப்பர் சுவாமிகளின்
## முதுமைப் பொறுமை

*— கோவைகிழார்*

1. காலநிலை— உலக சரித்திரத்தில் சமய வரலாற்றை ஆராய்ந்து பார்த்தால் குறிப்பிட்ட காலவரையறைகளுக்கு ஒருமுறை சமயப் பெரியார்கள் தோன்றி, சமய ஒழுக்கங்களை நிலைநிறுத்தும் பொருட்டுத் திருத்தங்கள் செய்து வந்திருப்பதை அறிவோம். பெரியார்கள் அடிக்கடி தோன்றியிருந்த போதிலும் 500 ஆண்டுகளுக்கு ஒருமுறை அவர்கள் சிறுசிறு தொகுதிகளாக அவதரித்து மிகப் பெருமை பொருந்தய சீர் திருத்தங்களைச் செய்து வந்திருக்கின்றார்கள். இச் செய்தியை விளக்கமாகக் கூறுமிடத்து 2500— ஆண்டுகளுக்குப்பின் பாரதத்தில் மகா வீரரும், புத்தரும், சீனாவில் கன்பூஸியசும் **(Confucius)** தோன்றி இவ்விரு நாடுகளிலும் புதுக்கொள்கைகளை நிறுவினார்கள். இனி 2000 ஆண்டுகளின் முன் யூதர்களின் இயேசுவும், போலும் **(Paul)** தோன்றி கிறிஸ்தவ சமயத்தை தோற்றுவித்தார்கள்.

1300 ஆண்டுகளின் முன் தமிழ் நாட்டில் அப்பரும் சம்பந்தரும், அரபு நாட்டில் முகமதுவும் தோன்றிச் சைவத்தையும் இஸ்லாமியத்தையும் நிலைநிறுத்தினார்கள். பிறகு 1000 ஆண்டுகளின்முன் தென்னிந்தியாவில் சைவமறுமலர்ச்சி ஏற்பட்டது. இறுதியாக 500 ஆண்டுகளின் வாழ்க்கைகள் நமக்கு எடுத்துக்காட்டுகளாக இருக்கின்றன. பதின்மூன்று நூற்றாண்டுகளுக்கு முன் தென்னாட்டில் தோன்றிய சைவப் பெரியார்கள் அப்பரும் சம்பந்தரும் ஆவார்கள். இவர்களிலே நெடுங்காலம் வாழ்ந்து உலகமக்களுக்குத் தமது அனுபவப்பயனை அளித்தவர் அப்பர் சுவாமிகள். அதே சமயத்தில் சின்னஞ்சிறு வயதிலேயே மிக ஆற்றலோடு திருத்தொண்டு செய்தவர் சம்பந்த சுவாமிகள். இவ்விருவரும் முதுமையின் பொறுமைக்கும், இளமையின் ஆற்றலுக்கும் நல்ல உதாரணங்களாக இருந்து மக்களின் முன்னேற்றத்திற்கு வழிகாட்டிகளாக இருந்திருக்கிறார்கள்.

இவ்விருவரும் விதைத்த சைவ விதைகள் தற்போது சைவமரமாகி வளர்ந்து சைவப்பழங்களை யீன்று சிவாமிர்தத்தை ஊட்டிக் கொண்டு வருகின்றது. இவ்விரு பெருமக்களில் அப்பரைப்பற்றி சிறிது கூறுவோம்.

**2.** இளமையில் கல்வி— அப்பர் சுவாமிகள் 6ம் நூற்றாண்டில் தமிழ் நாட்டிலே நடுநாடு என்று வழங்கிய ஆற்காட்டுப் பிரதேசத்தில் திருவாமூரில் சைவ வேளாளர் குலத்தில் அவதரித்தார். அவர்கள் குலமும் குடும்பமும் நல்லபடிப்புப் பெற்று அரசர் கைங்கரியத்திலும். பொதுநலச் சேவையிலும் ஈடுபட்டிருந்தனர். அப்பரின் பிள்ளைத்திருநாமம் மருணீக்கியார் என்பது. அவருக்குத் திலகவதியர் என்ற ஒரு தமக்கை இருந்தார். அந்த அம்மைக்கு நிச்சயிக்கப்பட்டிருந்த கணவனார் போரில் உயிர் துறந்தமையினால் அந்த அம்மை கைம்மை நோன்பு மேற்கொண்டு ஒழுகினார். இளவயதிலுள்ள அவ்விருவரின் பெற்றோரும் இளமையிலேயே மறுஉலகம் சென்றபடியினால் மருணீக்கியார் தமக்கையாரின் ஆதரவில் வாழ்ந்து வந்தார்.

இளவயதிலேயே கல்வி கற்கும் காலத்தில் கணக்கற்ற நூல்களை ஆராயும் போது. அக்காலத்தில் சிறந்து விளங்கிக் கொண்டிருந்த சமணசமய நூல்களையும் ஓதத்தொடங்கினார். அந்தச் சமயத்தில் அவருக்குப்பற்று அதிகரித்தது. தமக்கையாரின் அளவற்ற அன்பை விலக்கிக்கொண்டு சமயப்படுகுழியில் விழுந்தார். இதனைத் தாமே தம் வாக்காகிய "காத்தாள்பவர் காதல் இகழ்ந்தமையால் கரைநின்றவர் கண்டுகொள் என்று சொல்லி நீத்தாயகயம் புக நொக்கியிட. நிலைக் கொள்ளும் வழித்துறைஒன்றறியேன்" என்ற பாசுரத்தில் கூறுகின்றார். பிறகு சமண நூல்களை மேற்கொண்டு புலமை பெற்று சமணசமயக் குரனவர் ஆகின்றார். இக்காலத்திலும் நமது நாட்டில் எத்தனையோ இளைஞர்கள் தமக்குரிய காவலையிழந்து இறை ஸ்தலத்தில் போய்ச் சேருவதில்லையா? திரிவிதாங்கூரில் இவ்வித மதமாற்றம் மிகவும் பெருகி வருகின்றதல்லவா? இதனைத் தடுக்க நாம் என்ன செய்து வருகின்றோம்.

**3.** சமய மாற்றங்கள்— தனது தம்பியாராகிய மருணீக்கியார் சமணப் படுகுழியில் வீழ்ந்ததைக் கண்டு மிகவும் மனம் வருந்தித் தலகவதியம்மையார் திருவதிகை வீரட்டானத்துக்குச் சென்று அங்கே திருக்கோயிலிலே பணிவிடைகள் செய்து கொண்டு இறைவனை

வணங்கும் பொழுதெல்லாம் தன் தம்பியாருக்கு நற்குணம் வரவேண்டுமென்றும், சைவத்திற்குத் திரும்பி வரும்படி கருணைபுரிய வேண்டும் என்றும் தொழுது கொண்டேயிருந்தார். அவருடைய பிரார்த்தனை ஒருநாள் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இறைவன் மருணீக்கியார் மீது மறக்கருணை காட்டினார். மருணீக்கியாருக்கு பொறுக்க வொண்ணாத குடல் நோய் வந்தது. சமண மருத்துவர்களும் மாந்திரீகர்களும், குரவர்களும் என்ன செய்தும் பயன்படவில்லை குடல் நோய் அதிகரித்தது. வலி தாங்க முடியாமல் போகவே தமக்கையை நினைத்தார். முதலில் ஆள் அனுப்பி விட்டு தமக்கையாரிடம் தாமே வந்தார்.

மிகுந்த மகிழ்ச்சியுடனே தம்பியாரை வரவேற்று அதிகை வீரட்டானத்து ஆலயத்துக்கு அழைத்துக் கொண்டு போய்த் திருநீறு சாத்தியருளினார். நோய் நின்றது. சைவம் பழுத்து எழுந்தார் அருள்பெற்றார். இறைவனை வணங்கி திருப்பாடல் அருளிச் செய்தார். அதுதான் "கூற்றாயினவாறு" என்ற தொடக்கத்துப் புகழ்பெற்ற பதிகம். அது முதல் மருணீக்கியார் திருநாவுக்கு அரசனானார். சமணராயிரந்தவர் கொழுத்த சைவரானார். எத்தனை எளியவழி, வெறுந் திருநீறு சாத்தியதே போதும் மதம் மாற்றத்துக்கு வேறென்ன கழுவாய் வேண்டும்? பணவிரையம் வேண்டாம். சடங்குகள் வேண்டாம். பிறருக்குத் தானதருமங்ள் வேண்டாம். தக்க ஆசாரியனால் திருநீறு பெற்றால் போதும் அகத்தூய்மை வேண்டுமேயொழிய வெளித்தூய்மை வேண்டியதில்லை. இந்த நாட்டிலும் புறத்தே சென்ற ஏழைச் சமையிகளைத் திருப்பி அழைத்துக் கொள்வதற்குத் திருநீறு சாத்துதலே போதும். அதனையே நாகர்கோயில் தொண்டன் ஆசிரியர் அவர்கள் சாதனமாகக் கொண்டு செய்து வருகின்றார்.

4. துன்பத்தில் பொறுமை — சமணத்திலிருந்து புறத்தே சென்று சைவத்தை மீண்டும் மேற்கொண்ட மருணீக்கியார் மீது சமணர்கள் பொறாமையும் சினமுங் கொண்டார்கள். தங்கள் அரசனாகிய மகேந்திரபல்லவனிடம் அபவாதம் கூறினார்கள். மகேந்திரபல்லவனும் திருநாவுக்கரசரை தண்டிக்கும்படி ஏவினான் நஞ்சு கொடுக்கப்பட்டது அது ஒன்றும் செய்யவில்லை, யானை ஏவப்பட்டது. அது அவரைத் தொடவில்லை. நீற்றறையில் இட்டார்கள் அவர் அதனைத் தென்றலைப்போல் அநுபவித்தார். இறுதியில் கல்லைக் கட்டி கடலிலிட்டார்கள். கல்லே தெப்பமாகிக் கரையில் அவரைச் சேர்த்துவிட்டது. பிரகலாதனைத் தண்டித்த இரணியனுடைய தோல்விகளை திருநாவுக்கரசர் மூலம் பல்லவனிடம் கண்டார்கள்.

அப்போது நாவுக்கரசர் பாடிய தேவாரங்கள் மிகச் சிறந்தவை அச்சொற்களில் மிளிர்ந்திருக்கும் அச்சமின்மை, வீரம் முதலிய பண்புகளை எவரே அறியமாட்டார்கள்? "நாமார்க்கும் குடியல்லோம்" என்ற

தேவாரத்திலுள்ள வீரச்சுவையை வேறு எந்த நூலில் காண முடியும்? தோல்வியுற்ற அரசனும் சமணர்களும் சைவர்கள் ஆனார்கள். இச்சரிதம் உங்களுக்கு எடுத்துக்காட்டல்லவா? திருநாவுக்கரசர் தண்டனைகள் பட்டகாலத்தில் காட்டிய பொறுமைக்கு அளவுண்டா? துன்பத்தில் காட்டும் பொறுமையே உயர்ந்த பண்பாட்டின் சிறப்பு என்று அறியலாம்.

5. சமயச் சார்பு— தாம் மேற்கொண்ட சைவ சமயமே உயர்ந்த சமயம் என்று கண்ட திருநாவுக்கரசர் அந்த மெய்ச்சமயத்தை உலகமெங்கும் பரப்பவேண்டுமென்ற பேரவாக கொண்டார். அன்பர்கள் புடைசூழ கோயில்கள் தோறும் சென்று வழிபாடுகள் செய்து அரியகருத்துக்கள் கொண்ட தேவாரங்களைப் பொழிந்தார். அவ்வாறு பொழியும் போது இனிமையான இசைகளொடு சமயக் கொள்கைகளைப் போற்றினார். சொல்லும் பொருளும் பொருந்தியிருக்க இன்னிசையும் துணைகொண்டு விளங்க அவருடைய தேவாரம் எவரைத்தான் கவராது? இந்த முயற்சியில் வெற்றியும் பெற்றார். இந்தமுறையில் சமயப்பிரசாரம் செய்து கொண்டு போகும்போது நாட்டு மக்கள் எல்லாரும் சைவத்தில் ஈடுபடத் தொடங்கினார்கள். இறைவனை வழிபடாத மக்கள் எல்லோரும் சைவத்தில் ஈடுபடத் தொடங்கினார்கள்.

இறைவனை வழிபடாத மக்கள் எல்லோரும் கோயில்களுக்குச் சென்று இறைவணக்கம் செய்தார்கள். அவர்கள் பாடும்படியான பாடல்களும் மனஎழுச்சியும், மனத்தூய்மையும், மனத்திட்பத்தையும் உடைய தமிழ்ப் பாக்களை பிறமொழியிலல்லாமல் தமது தாய்மொழியிலேயே வழங்கும் முறையைக் கண்ட எல்லா மக்களும் அவ்வழிபாட்டில் ஈடுபட்டார்கள். இந்த முறையைக் கைக்கொண்டு கிறிஸ்தவர்கள் பல்லோரைக் கவர்ந்துகொண்டார்கள். நீங்களும் அவ்வாறே செய்து அவர்களைத் திருப்பியழைக்கவேண்டும். தாய்மொழியில் இன்னிசை, அரும்பொருள், அன்புமயம் இவைகள் இருந்தால் எவரே ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்.

இந்த முறையாக திருநாவுக்கரசர் சமயப் பிரசாரம் செய்துகொண்டு போகையில் மூன்று முறை சம்பந்த சுவாமிகள் என்ற இளைய ஆச்சாரியாரை சந்தித்தார். அப்போதுதான் அவரால் அப்பர் என்ற பெயர் இடப்பட்டது. இவ்விரண்டு சமயக்குருவர்களும் தமிழ்நாடு முழுவதிலும் சமயப்பிரசாரம் செய்து சைவத்தைப் பரப்பினார்கள். வெகு தீவிரமாகப் பிரச்சாரம் செய்து கொண்டு போகையில் அப்பர் ஒருமுறை உண்ணாவிரதம் இருக்க கேவண்டி வந்தது. பழையாறை எனுமிடத்தில் சமணர்கள் சிவாலயத்தை மண்ணுக்குள் புதைத்து விட்டார்கள். அப்பர் உண்ணாவிரதமிருந்தார். அது கண்ட அரசன் கோயிலை வெளிப்படுத்திப் புதுப்பித்தான் உண்ணாவிரதத்தால் அவர் கருத்து நிறைவேறிற்று. உண்ணாவிரதமென்பது தற்கால இயக்கமென்று எண்ணவேண்டாம். அப்பர் காலத்திலேயே அது தொடங்கப்பட்டது.

**6.** கடும் துறவும் எளிய தோற்றமும்— அப்பர் நீண்ட காலம் வாழ்ந்தவர். உலக வாழ்க்கையில் கடுமையான துறவறத்தையே பூண்டார். தனக்கென வாழா பிறர்க்குரியாளராய் உடல், பொருள், ஆவி மூன்றையும் இறைவனுக்கே தத்தம் செய்துவிட்டு மக்களைச் சமயத்தில் ஈடுபடச் செய்வதே தனது நோக்கமாகக் கொண்டு நாடு முழுவதும் சுற்றினார். அவருடைய தோற்றம் மிகவும் எளிமையானது. அதனை வெகு நன்றாகச் சேக்கிழார் சுவாமிகள் வருணித்திருக்கின்றார்.

**"மார்பாரப் பொழி கண்ணீர் மழை வாருந் திருவடிவும் மதுரவாக்கில்**
**சேர்வாருந் திருவாயில் தீந்தமிழின் மாலைகளுஞ் செம்பொற்றாளே**
**சார்வான திருமனமும் உழவாரத் தனிப்படையும் தாமும் ஆகிப்**
**பார்வாழத் திருவீதிப் பணிசெய்து பணிந்தேத்திப் பரவிச்செல்வார்"**

இந்தச் செய்யுளில் வருணிக்கப்பட்டிருக்கும் ஓவியம் எத்தனை சிறந்தது. சிறிது ஆராய்ந்து பாருங்கள். உலகத்திலுள்ள எந்தச் சமய ஆசாரியரும் இத்தனை எளியபொலிவுள்ள தோற்றத்தைக் கொண்டிருந்தாரா? தோற்றத்தில் பொலிவு மட்டுமா? அவருடைய கொள்கைகள் முழுவதும் அவ்வுருவத்தில் ஒளிசெய்கின்றனவல்லவா? கைத்தொழிலின் மேன்மையென்று இக்காலத்தில் மேடைகளில் பேசுகின்றார்கள். அப்பரோ அதனைத் தன்னுருவத்திலும் செயலிலும் நிகழத்திக் காட்டினார். உழாவாரத் திருப்பணியென்பது அவருடைய பணியாகும். அதுவே சேவையுமாகும். இக்காலத்தைப்போலவே அக்காலத்திலும் கோயில்கள் புறக்கணிக்கப் பட்டு வந்தன. மக்களுடைய வழிபாடு இல்லாத காரணத்தினால் கோயில்கள் கல், முள், செடி, கொடி படர்ந்திருந்தன. அதை நீக்கி கோயில் வழிபாட்டை செயல் முறைக்குக் கொண்டுவர வேண்டுமென்று துணிவு கொண்ட அப்பர் தானே உழவாரப் படைகொண்டு தன் கையாலே சேவை செய்தார். அதைக் காணும்போது பின்பற்றும் எவரும் அச்சேவையில் ஈடுபடமாட்டார்களா? விரைவிலே கோயில்களெல்லாம் புனிதமாக்கப்பட்டன. மக்களெல்லாரும் சமயசேவையில் ஈடுபட்டார்கள். அப்பருடைய சரிதத்தை அறிந்த பின்னராவது நமது நாட்டு மக்கள் கோயில்களைத் தூய்மையாக வைக்க மாட்டார்களா?

**7.** சேவை— திருத்தொண்டு அல்லது சேவை செய்வதில் அப்பர் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகின்றார். அவர் வாழ்ந்த

காலத்து மக்களுக்கு மட்டுமல்ல இந்தக்காலத்து மக்களுக்கும் கூட அவரே சிறந்த எடுத்துக்காட்டு ஆவார். திருத்தொண்டு புரிவதில் பொதுமக்கள் ஈடுபட வேண்டுமென்ற கருத்திலே விளங்கினார். துன்பப்படுகின்றவர்கள் எவராயிருந்தபோதிலும் அவருடைய துன்பங்களைக் களைந்தார். ஒருகாலத்தில் தன்னை விருந்தினுக்கழைத்த அப்பூதி அடிகளுடைய மூத்தமகன் அரவால் தீண்டப்பட்டு உயிர்துறந்ததைக் கேட்ட அளவில் பதிகம் அருளிச் செய்து உயிர்ப்பித்தார். உயிர்கள் மீது அவருக்கிருந்த கருணைக்கு அளவில்லை. கிறிஸ்துவின் சரிதத்தில் பேசப்படுகின்ற அற்புதங்களைக் கண்டு போற்றுகின்றோம். அப்பருடைய சரிதத்தில் நஞ்சு நீக்கப்பட்டு இறந்தவன் பிழைப்பிக்கப்பட்டான என்றால் நாம் ஏன் வியக்கக் கூடாது? இப்படிப்பட்ட சேவை, திருத்தொண்டுகள் பலவும் சமயாசாரியர்களுடைய சரிதங்களில் காண்கிறோம். மக்களை நல்வழிப்படுத்தி திருத்தொண்டுகளில் ஈடுபடுத்துவதற்காகவே சமயாசாரியர்கள் இவ்வற்புதங்களைச் செய்தார்கள்.

இந்த வகையில் திருத்தொண்டுகளைச் செய்து தனது முதிர்ந்த வயதாகிய எண்பத்தென்றில் அப்பரடிகள் இறைவனுடைய திருவடிகளையடைந்தார்கள். அத்தனை முதிர்ந்த வயது வரையில் மிகப் பொறுமையே தமது பண்பாடாகக் கொண்டு உலகவாழ்க்கை நடத்திய பெரியார் அப்பரடிகள் ஆவார். அவரைப் போலவே நாமும் சமயச் சேவையில் ஈடுபட்டு நமது சமய ஆர்வத்தைப் பெருக்குவோமாக.

அப்பரைப்பற்றிய துதியோடு இதனை முடிப்போமாக.

***"இடையறாப் பேரன்பும் மழையாரும் இணைவிழியும் உழவாரத்தின்
படையறாத் திருக்கரமும் சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சம்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப் பெருந்தகைதன் ஞானப்பாடல்
தொடையறாச் செவ்வாயும் சிவவேடப் பொலிவழகும் துதித்து
—வாழ்வாம்."***

***—நன்றி ஞானசம்பந்தம்***

# நமது சமயம்

**— த. மாணிக்கவாசகர் (நாதன்)**

உலகின் நாலா பக்கங்களிலும் பரந்து வாழ்கின்றார்கள் தமிழ் மக்கள். அவர்கள் எந்த மூலைகளில் வாழ்ந்தாலும். தங்கள் மொழி. இனம். கலை. கலாச்சாரம் பண்பாடு முதலியவற்றை போற்றி வளர்த்து வருகின்றார்கள்.

ஒரு சிலர். எங்களுக்கு மொழியும் வேண்டாம் இனமும் வேண்டாம் கலையும் வேண்டாம் என்றும் இன்னும் சிலர் இந்து மதத்தை விட்டு வேறு மதத்திற்கு மாறிவிட்டு. இந்து சமயத்தில் உள்ள சிறப்புகளையும் ஆத்மீக அறிவுகளையும் அறியாது ஏதோ பிதற்றிக் கொண்டு திரிகிறார்கள். இந்துசமயமானது வற்றாத ஒரு ஜீவ நதி. அது அள்ளஅள்ள குறையா. ஒரு பெரு நதி. உலகில் உள்ள எல்லாச்சமயங்களும். இந்து சமயம் என்னும் தாய்நதியிலேயே இருந்து. பல கிளை நதிகளாக ஓடுகின்றன என்று சொல்லலாம். காலத்திற்கு காலம். தோன்றிய மகான்களின் பெயரிலேயே. அச்சமயங்கள் அழைக்கப்படுகின்றன. உதாரணமாக புத்தம் கிறீஸ்த்தவம் .இஸ்லாமியம் என்பன முறையே புத்தர் யேசுகிறீஸ்து நாதர் முகமது நபிகள் அவர்களின் பேர்களிலேயே அழைக்கப்பட்டுவருகின்றன. எல்லா சமயங்களுக்கும் ஆரம்பிக்கப்பட்ட ஆண்டுகள் கணக்கில் இருக்கின்றன.

ஆனால் உலகில் உள்ள சர்வசமயங்களும் மக்களை நல்வழிப்படுத்தி. சமுதாய வளர்ச்சிக்கு பெரும் பங்கு வகிக்கின்றன.

இந்து சமயம் ஆதியும் அந்தமும் இல்லாத ஆரம்பித்த காலமோ. அல்லது ஆரம்பித்தவரின் பேரோகுறிப்பிடப்படாத ஒரு பெரு விருட்சம். இந்து சமயம் சைவம் வைணவம் சாக்தம் சமணம். என பல பிரிவுகளைக் கொண்டதாகும் இப்பிரிவுகள் யாவும் எம்எல்லோருக்கும் இறைவன் ஒருவனே என்ற உண்மையை மக்களுக்கு அறியப்படுத்துகின்றன. அவர் சக்தியாக சிவனாக விக்னேஸ்வரனாக விஷ்ணுவாக முருகனாக பல பெயர்களில் பல உருவங்களில் உலகு எங்கும் வாழும் இந்துக்களினால் வழிபடப்படுகிறார்

நாம் கோவிலுக்கு சென்று சுவாமி தர்சனம் செய்யப்போகும் பொழுது. குளித்து தோய்த்து உலர்ந்த வஸ்திரம் தரித்து. வீபூதி

தரித்து, முடிந்தவரை இறைவனுக்கு உரிய பூசைப்பொருட்களான பழம், பாக்கு, வெற்றிலை, தேங்கா, கற்பூரம், பூக்கள் எடுத்துச்சென்று இறைவனுக்கு முழுமையாக ஒப்படைத்து விடுகின்றோம் அதற்குப் பின் அது எமது பொருள்கள் அல்ல கோவிலுக்குள் சென்று இறைவன் சுற்றுபிரகாரத்தை வணங்கி வலம் வரும் பொழுது இறைவன் திரு நாமத்தை உச்சரித்துக் கொண்டே வலம்வர வேண்டும். இறைவனுக்கு அர்ச்சனை செய்யப்படும் பொழுது அந்த நாமங்களை நாமும் சொல்லி உச்சரிக்கவேண்டும் அவரின் நாம அர்ச்சனை செய்யப்படும் பொழுது அந்த நாமங்களை நாமும் சொல்லி உச்சரிக்கவேண்டும் அவரின் நாம அர்ச்சனைகளை, சமஸ்கிருதத்திலும் தமிழிலும் பல, அடியார்கள், பெரியார்கள் பாடியுள்ளார்கள்.

அப்படி ஒரு இறைவனின் நாம அர்ச்சனை, தவத்திரு குன்றக் குடி அடிகளார் அவர்களின் நேரடிச் சமூகத்தில் தீவுப்பகுதியிலேயே முதன் முதலாக புங்குடுதீவு கிழக்கு கலட்டி வரசித்தி விநாயகர் ஆலயத்தில் இலங்கை, இந்தியா, மலேசியா, சிங்கப்பூர் இன்னும்பல நாடுகளில் நூற்றுக்கணக்கான ஆலயங்களில் பிரதம குருவாக இருந்து, கும்பாபிஷேகங்கள் பலசெய்த சிவஸ்ரீ நயினை, ஐ. கைலாச நாதக் குருக்கள் அவர்களினால் கோவிலின் பிரதம அர்சகர் பஞ்சாட்சர ஐயர் அவர்களின் உதவியுடன் 1960ம் ஆண்டளவில் நடைபெற்றன. இந்த தமிழில் இறைவனை அர்சிக்கும் ஏற்பாட்டினை ஆலய மணியின் ஆசிரியரும் புலவருமான, ஈழத்து சிவானந்தன் அவர்கள் செய்திருந்தார்கள் தமிழ் மக்களாகிய நாம் தமிழில் அர்சிப்பது வியப்பு ஒன்றும் இல்லை.

கோவிலுக்கு சென்ற நாம் அர்சனை பூசைமுடிந்து வீபூதி பிரசாதம் பெற்றபின், ஓர் இடத்தில் தனியாக அமர்ந்து இருந்து சிறிது நேரம் இறைவனை தியானிக்க வேண்டும். இப்படி எமது, மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்து புலன்களையும் அடக்கி இறைவனை மாத்திரம் சிந்தித்து இருப்போமாகில் அதுவே நிஷ்டையாகும். இப்படி சிந்தனையின் தொடர்பாக எங்களுக்கு நாம் யார்? ஏனைய உயிரினங்கள் யார்? ஏன் சில உயிரினங்கள் துன்பப்படுகின்றன? என்ற யோசனைகள் மனத்தில் ஏற்படும் அவற்றின் சந்தேகங்களை தீர்ப்பதற்கு, பல அரிய இந்து மத நூல்களை வாசித்தும், மகான்கள் அறிஞர்கள் சொல்லக் கேட்டும் பயன் அடைவோம் ஆக.

# நாமவர்க்கே.....

— நாகேசு தர்மலிங்கம்

கடவுள் இருக்கிறாரா இல்லையா?
இது காலம் கடந்த விவாதம்
புதிதாக ஏதாவது கதைக்க வருபவர்கள்
போடும் புதிர்தான் இந்த இல்லை என்ற கூவல்
இவர்களுக்குத் தோள் கொடுப்பவர்கள்
இன்றும் இருக்கத்தான் செய்கிறார்கள்
மதம் அபின் என்றவரின் வழித்தோன்றல்கள்
பெரியார் விட்டுச்சென்ற இறை விரோதிகள்
என்ன எதுவானாலும் உண்மை இருப்பது
உண்மை என்று உத்தமர்கள் பலர்
உணர்ந்து உரைத்துள்ளார்கள்
விஞ்ஞானத்தையும் விஞ்சிய இவ்வுண்மையை
மெய்ஞ்ஞானம் ஒன்றே தெளிந்து கூறிவிடும்
மெய்ஞ்ஞானம் எது? கடவுளை எப்படி அறிவது?
நான் பெரியவனாகி பணம் சேர்க்க வேண்டும்
என் பிள்ளை படித்து பட்டம் பெறவேண்டும்
சகல வசதியும் என் குடும்பம் பெற்று
சமூகத்தில் நான் புகழ் பெறவேண்டும்
நோயும் நொடியும் நீங்கி என் வாழ்வு
சீரும் சிறப்பும் பெற வேண்டும்

என்று கடவுளிடம் கேட்டு
எங்கள் தேவையில் நிறைவு பெற்றிட
இறைவனை வளைத்து எம் வசமாக்கி
எல்லாம் வல்லோனிடம் ஏவல் தருகிறோம்
இந்தப் பரம் பொருள் எமக்கு ஏவிய
அறம் செய், சினம் தவிர் இரக்கம் கொள்
அடுத்தவனை உன்னைப் போல் நேசி
ஜபம் இட்டு உன்
பஞ்சமா பாதகத்தை அடியோடு விடு
என்பனவற்றைச் சிறிதளவேனும்
சிந்தனை கொண்டோமா?
எம்மை ஆட்கொள்ள இறைவன்
தந்த ஏவல்கள் அல்லவா இவைகள்
நம்மை முன்னிறுத்தி நமது தேவைக்காய்
அவனை ஆட்கொள்ள நாம் முயல்கிறோம்
முன்னவர்கள் முனிவர்கள், ஞானிகள், பெரியவர்கள்
சொல்லிய வேதங்களை உண்மையுடன் மீட்டு
வல்ல பரம்பொருள் எம்மை ஆட்கொள்ள
அவனருளாலே அவன்தாள் பணிவோம்.



*சிறுகதை*



# அழைப்பு

— *சொக்கன்*

"இந்திய அமைதிப்படை எல்லாரையும் நல்லூர்க் கந்தசுவாமி கோயிலுக்குப் போகட்டாம். கெதியாய் வெளிக்கிடுங்கோ"

கதிரைவேற்பிள்ளை இந்தச் செய்தியைச் சொன்னபோது அவருடைய முகம் சாவெடில் அடித்ததுபோலக் காட்சி அளித்தது. அவரது உடல் அவரை அறியாமலே கிடுகிடுவென்று நடுங்கியது. கண்களிலே அளவிடமுடியாத பீதி! "எங்கையிருந்தாலும் நடப்பது நடந்துதான் தீரும். அண்டைக்கு எழுதின விதியை அழிச்செழுத ஏலுமே? என்ன வந்தாலும் ஒண்டாய் அநுபவிப்பம்" என்று காலையிலே சொல்லிவிட்டு வெளியே சென்ற கதிரைவேற்பிள்ளை வேறு. இப்பொழுது இப்படிச் சொல்லும் கதிரைவேற்பிள்ளை வேறு.

அவர் சொன்னதை நிரூபிப்பது போல வானத்தை மூடிக்கொண்டு ஹெலிகளும் விமானங்களும் பெரிய இரைச்சலோடு பறந்துகொண்டிருந்தன. இருந்திருந்து 'ஷெல்'களின் இடிமுழக்கம் காதுகளைச் செவிடு படுத்தியது. யாழ்ப்பாணக் குடாநாட்டின் ஆயுட்காலம் நிமிஷங்களாகக் குறுகிக் கொண்டிருக்கிறதோ?

"அப்பவே சொன்னன். அயல் அட்டையிலை இருந்ததுகளெல்லாம் போட்டது போட்டபடி ஓடிப்போகேக்கை வீராதி வீரன் போலை வீறாப்புப் பேசினாய் இப்ப.........?" என்று பிள்ளையின் தாய் தனது தீர்க்க தரிசனத்தைப் பிரகடனப்படுத்திய பொழுது, அவளின் அசந்தர்ப்பபேச்சு, பிள்ளையின் நெஞ்சை நெருடியது. அவருக்கு எரிச்சல் எல்லை கடந்தது. "அம்மா! சும்மா விழல்கதை கதையாமல் கெதியாய் வெளிக்கிடுங்கோ" பிள்ளையின் அதட்டலான பேச்சு அம்மாவை மட்டுமல்ல. அவரின் மனைவியையும்

குமார்பிள்ளைகள் மூவரையும் பரபரப்படையச் செய்தது.

மத்தியான நேரம். சமையல் எல்லாம் அரைகுறை. அடுப்பில் சோறு வெந்து "களகள" ஒலியை எழுப்பியது. இரண்டு கறிகளும் குழம்பும் ஏற்கனவே தயாராகி விட்டன. ஆனால் பிள்ளையின் அவசரமும் பதற்றமும் அவரது குடும்ப அங்கத்தவர்களையும் தொற்றிக் கொள்ள. அவர்கள் கைக்குக் கிடைத்த உடுப்புக்களைப் பெட்டிகளில் திணிப்பதும் கதவுகளைப் பூட்டிச் சாவிகளை எடுப்பதுமாய் எவ்வளவு விரைவாக ஆயத்தமாகினர். மனைவி நகைநட்டுக்களையும். பெட்டியுள்ளே மறைத்து வைத்திருந்த பணப்பையையும் எடுத்து மார்புச் சட்டைக்குள்ளே செருகிக் கொண்டு ஆயத்தமாகி விட்டாள்.

எல்லாருக்கும் முன்னால் தனது ஓரிருசேலைகளைப் பொட்டலியாகக் கட்டிக்கொண்டு பிள்ளையின் அம்மா 'றெடி'யாகி வாசல் கேட்டை அடைந்து விட்டாள்.

அப்பொழுதுதான் கதிரைவேற்பிள்ளை கேட்டார் "அப்புவை என்ன செய்யிறது" மற்றவர்கள் பதிலளிக்க முன்னமே அப்பு தமது கொட்டிலில் இருந்தபடி பதில் கொடுத்தார் "என்னைப்பற்றி யோசிக்கவேண்டாம். நீங்கள் தப்பி ஓடித் திரும்பி வந்தால் போதும். போயிட்டு வாங்கோ"

அந்த வார்த்தைகள் புறப்பட்டவர்களுக்குப் பெரும் ஆறுதலை அளித்தன. அப்புவுக்கு வயது எண்பதைக் கடந்துவிட்டது. நடையிலும் சொல்லிலும் தளர்ச்சி ஏற்பட்டு நாளின் பெரும் பகுதியைப் படுக்கையிலேயே கழித்துக்கொண்டிருப்பவர். ஆனாலும் மகா பிடிவாதக்காரர்! தாம் நினைத்ததையே செய்வார். அவரோடு விவாதம் செய்யவோ. அழைத்துச் செல்லவோ அவர்களுக்கு இயலாது என்பது மட்டுமல்ல. அதற்கு வேண்டிய நேர அவகாசமும் அவர்களுக்கு இல்லை.

பிள்ளையின் தாய். அப்புவோடு ஐம்பத்தைந்து வருடங்கள் இல் வாழ்க்கையைப் பகிர்ந்துகொண்டவள் மட்டும் சிறிது தயங்கி. அப்பு இருந்த கொட்டிலுக்குள் நுழைந்தாள்.

"பிள்ளையள் போகட்டும் நானும் நீங்களும் மெல்ல மெல்ல நடந்து அவைக்குப் பின்னாலை போவம் வாறியளே"?

அப்பு சிரித்தார் "நீ போ. பிள்ளையளுக்கு உதவியாயும் ஆறுதலாயும் இருக்கும். நான் வந்தால் எல்லாருக்கும் அவஸ்தைதான். வீட்டைப் பாக்கிறதுக்கும் ஒரு ஆள் தேவைதானே? எல்லாரும் போயிட்டு வாருங்கோ. தப்பிப்பிழைச்சால் உங்களின்ரை முகத்திலை முழிக்கலாந்தானே?" அம்மாவுக்கு விம்மல் பொருமலுடன் அழுகை வந்தது. ஆனால் கணவர் சொல்வது நியாயமாகவே பட்டது.

மகன், மருமகள் பேரப்பிள்ளைகளுடன் ஒழுங்கையில் இறங்கி அவள் கிடுகிடுவென்று நடக்கத் தொடங்கினாள். அப்பு பெரிய கமக்காரன் அவர் அப்புவாகவே அவதாரம் எடுக்கவில்லை. கந்தப்பசேகரம் என்ற பெயரோடு பிறந்து, எல்லாரையும் போலவே வளர்ந்து, இளமைத் திரு விளையாடல்கள் பலவற்றில் ஈடுபட்டு, 'சண்டியன் கந்தன்' என்ற பட்டப் பெயரைத் தமக்கு உரித்தாக்கி, ஊரே நடுநடுங்க வாழ்ந்து, பொன்னம்மாவை மனைவியாக்கி, காலகதியில் அவளை ஐந்து பிள்ளைகளுக்குத் தாயாக்கி, அந்தப் பிள்ளைகளையெல்லாம் வளர்த்தெடுத்து, உரியகாலத்தில் அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளையெல்லாம் செய்து முடிக்க அவர் தவறவில்லை.

ஆனால் அவர் கடவுளைப் போலக் காலாதீதர்— காலங் கடந்தவர் அல்லர். சண்டித்தனங்களெல்லாம் அவரது நாற்பது வயதிலேயே அவரைவிட்டுக் குடிபோய் விட்டன. மாட்டுவண்டிச் சவாரியும், கள்ளுக் கொட்டில் வாசமும், திருவிழா உபயங்களும், ஊர் நாட்டாண்மையும் முன்பே கைதவறிப் போய்விட்டன.

பற்றுநிறைந்த கணவர், பொறுப்புள்ள தந்தை, பாசமுள்ள பேரர் என்ற தரங்களையெல்லாம் கட்டிக் காத்து இன்று அவற்றையும் கடந்து நரைதிரை மூப்புக்களோடு, 'என்று வருவன் எமனென்று எதிர்நோக்கி நிற்று தளர்கின்ற' கிழவராக, பழசாக, ***C90*** ஆக அவர் ஆகிவிட்டார்.

அவர் யாருக்கும் துணையல்லர். அவருக்கும் அவரது பொல்லைத் தவிர—மனைவி உட்பட —எவரும் துணையல்லர்!

அப்புவின் வாய் முணுமுணுக்கிறது "ஊருஞ் சதமல்ல. உற்றார்

சதமல்ல, உற்றுப் பெற்ற பேரும் சதமல்ல, பெண்டிர் சதமல்ல......'

ஒரு காலத்தில் அவர் ஆடாத வழக்குகள் இல்லை தமது காணி எல்லையைக் கடந்து வேலி போட்டதற்காக, அடுத்தவீட்டு அப்புத்துரையின் தலையை மண்வெட்டியால் பதம்பார்த்து, அதன் காரணமாக ஐந்து வருடக் கடுழியச் சிறைவாசம் அனுபவித்த மகாவீரர் அவர்! கதிரைவேற்பிள்ளைக்குத் தருவதாகச் சொன்ன சீதனத்தோடு கலியாணம் செய்து வைத்தவிடாக்கண்டர்! அன்றைக்கு, 'இட்ட அடிநோக எடுத்த அடி கொப்பளிக்க' வீட்டினுள் அடியெடுத்து வைத்த கதிரைவேற்பிள்ளையின் மனையாட்டிதான், இன்று அடிக்கடி 'ஷெல்'லடிபோலச் சொல்லடிகளால் அவரை வருத்திக் கொண்டிருக்கிறாள்!

மனைவி பொன்னம்மாமட்டும் என்ன குறைச்சல்? "வாக்குமாறி வயசுபோன காலத்திலை தாறதைத் திண்டிட்டு மூலையிலை சிவனே" எண்டு கிடக்காமல் எந்தநேரமும் புறணியளப்பு. இது ஏன் இன்னம் கவிண்டு போகாமல் கிடந்து இளசுகளின்ரை உயிரை எடுக்குது? சனியன்!" — பொன்னம்மாவின் மந்திரம் போன்ற சொல்லின்பத்தில் ஓர் அமுதத்துளி இது!

கதிரைவேற்பிள்ளை தகப்பனுடன் கதைப்பதே இல்லை. பேர்த்திகளுக்கு அப்பு என்றால் பெருய இளக்காரம்!

இந்தநிலையில் ஒருசில நாள்களாவது அவர்களிடமிருந்து விடுதலைபெற்று, அவர்களுக்குத் தாமும் விடுதலை அளித்து நிம்மதியாக இருக்கக் கிடைத்ததையிட்டு அவர் அடைந்த மனநிறைவுக்கு அளவேயில்லை.

ஹெலியும், விமானங்களும், ஷெல்சத்தங்களும், கண்ணிவெடி ஓசைகளும் அவரின் மன அமைதியைக் குலைக்கச் சக்தியற்றுப் போயின.

"நல்லூர்க் கந்தசுவாமி கோயில் கோயில் போலவே இருக்கு" வெளிவீதியெல்லாம் பொதுமலகூடங்களாய்ப் போச்சு. ஆண் பெண் கூச்சம் எல்லாம் காத்திலை பறந்திட்டுது கோயிலுக்கை சட்டையளும் செருப்புக்களும் தாராளமாய் நடமாடுது. நண்டுக்கறி சோறையும் முட்டைப்பொரியலையும் சனங்கள் கோயிலுக்குள்ளையே வைச்சுச் சாப்பிடுதுகள் வாந்தி பேதி உபத்திரவம் வேறை. அத்தியாவசிய

உணவுப் பொருள்களுக்கும் அங்கை தட்டுப்பாடு. விசுக்கோத்துக்கூட ஆனைவிலை குதிரைவிலை! அது ஒரு நரகம் அங்கை ஆர் போறது? எப்பிடிக் காலம் தள்ளுறாது? சும்மாய் கிடவுங்கோ. நடக்கிறது நடக்கட்டும்" என்று வாய் ஓயாமல் சொல்லிக் கொண்டிருந்த அவரின் மகனும் ஓய்வுபெற்ற அதிபருமான கதிரைவேற்பிள்ளை அவர்களே. இன்று தமது குடும்பத்தோடு அங்கே போகிறார். அகதிகளின் கூட்டத்தில் ஆறுபேரின் தொகை அதிகரிப்பு!

உயிர் ஆசைதான் எத்தகையது!

கந்தப்பசேகரம் என்ற கந்தப்பர் அல்லது கந்தர்(ன்) மனம். என்றும் இல்லாத வகையில் தெளிவாகச் சிந்திக்கத் தொடங்கி இருந்தது. "நான் யார். என் உள்ளம் யார். ஞானங்கள் யார். " என்ற கேள்விகள் அவர் சிந்தையில் அலையலையாக எழுந்தன. குசினி ஈறாகப் பூட்டிவிட்டுத் தங்கள் உயிரைக் காப்பது ஒன்றே குறியாகச் சென்ற மனைவி. மகன். மருமகள். பேர்த்திகள். "அப்பு சாப்பாட்டுக்கு என்ன செய்வாரோ?" என்று யோசிக்கவில்லையே என்று தொடக்கத்தில் அவர் மறுகியது உண்மைதான் ஆனால் அன்று பின்னேரம் பக்கத்துவீட்டு அப்புத்துரை அவரைக் தேடிவந்து ஒரு கலயத்திலே கஞ்சியைக் கொடுத்ததோடு அந்த மறுகலுக்கும் அவர் பிரியாவிடை அளித்துவிட்டார். அப்புத்துரை சேறு யாரும் அல்லர்! 'சண்டியன் கந்தனாய்க்' கந்தப்பர் இருந்தகாலத்தில் அவரது மண்வெட்டிக்குத்தலையைக்குனிந்து கொடுத்து தலையோடு வந்ததை மயிரிழையில் தடுத்து உயிர் பிழைத்தவர்.

அவருடைய வீட்டிலும் எல்லோரும் நல்லூர்க் கந்தசாமி கோயிலுக்குச் சென்றுவிட. அவர்மட்டும் வீட்டுக்குக் காவற் பிராணியாக மாறிக் கந்தப்பர் போல இருந்து வருபவர்தாம்!

கந்தப்பர் கஞ்சியைக் குடித்தபடி தம் வீட்டாரின் நன்றி கெட்ட செயலை ஒருபாட்டம் கொட்டித் தீர்த்தார். ஆனால் அப்புத்துரையோ சற்றும் அசையவில்லை. "இங்கை பார் கந்தர்! எங்கடை காலம் இன்னும் ஒருமாதமோ. ஒருவருசமோ? நாங்கள் எங்கடை காலத்திலை அநுபவிக்கவேண்டியதை எல்லாம் அநுபவிச்சுத் தீர்த்திட்டம். இனி எங்களுக்கென்ன? எங்கடை பேரைச் சொல்லிக் கொண்டு எங்கடை பரம்பரையாவது இந்த மண்ணிலை உரிமையோட வாழட்டும். அதுகளை நோகிறது பெரும் பாவம்" என்று அப்புத்துரை சொன்ன அந்தக் கணத்திலிருந்து............

கந்தப்பர் முற்றிலும் புதிய மனிதராகி விட்டார். அப்புத்துரை கேட்டுக்கொண்டபடி வளவுப் பொட்டுக்குள்ளால் நுழைந்து. அவர் அப்புத்துரை வீட்டிலேயே சென்று இருக்கத் தொடங்கினார்.

அங்கே. அப்புத்துரையும் கந்தப்பரும். அப்புத்துரையின் 'பொன்னம்பலம்' என்ற நாய். கொட்டிலில் கட்டப்பட்டு 'ஷெல்' அடிச்சத்தம் கேட்கும் ஒவ்வொரு சமயத்திலும் துள்ளி மிரண்ட நிறைமாதக் கன்றுத்தாய்ச்சியான பசு ஆகியவற்றோடு புதியதொரு வாழ்வைத் தொடங்கினர்.

இருவரும் காலையில் எழுந்திருப்பார்கள். காலைக்கடன்களை முடித்துக்கொண்டு தங்கள் துணிமணிகளைத் துவைத்து உலர்த்தி. ஸ்நானம் செய்வார்கள். பின்பு அங்குள்ள சாமிபடத்துக்கு முன்பு விளக்கேற்றித் தேவார திருவாசகங்களை உருக்கமாகப் பாடுவார்கள். அப்புத்துரைக்குப் புராணபடன அநுபவம் இருந்தது. கந்தப்பருக்கும் ஓரளவு கேள்வி ஞானம் உண்டு. இருவரும் கந்தபுராணத்தை உற்பத்திகாண்டத்திலிருந்து நாள்தோறும் நூறு நூறு பாடல்களாகப் படித்து உரைசொல்லி மகிழ்ந்தார்கள். புதியதொரு பக்தி அநுபவத்தில் திளைத்தார்கள்.

அதுநாள்வரை தமது இளைய பரம்பரையினர் அநுபவித்துவரும் துன்பங்ளை நினைத்து நினைத்து ஏக்கப் பெருமூச்சும். மௌனக்கண்ணீரும் விட்டுத் தனிமையிலே குமைந்து வந்த உணர்வுகள் கந்தப்பரை விடுத்து மெல்ல மெல்ல அகன்று போயின.

"சூரபன்மனிடமும் அவன் உடன்பிறப்புக்களிடமும். படைகுடி பரிவாரங்களிடமும் தேவர்கள் பட்ட அல்லல்களிலும் அதிகமாகவா நாங்களும் எங்கள் சந்ததியும் படுகிறோம்? முருகப் பெருமானின் ஞானவேலினால் தேவர்கள் துயர் களையப்பட்டது போல அவன் அருளாலே எங்களுக்கும் விடிவுகாலம் ஏற்படாமலா போகப் போகிறது? அந்த விடிவின் பொழுது நாங்ள் இந்த உலகில் இல்லாமல் போய்விடலாம். ஆனால் எமது சந்ததியினர் நிச்சயம் அமைதியும் இன்பமும் நிறைந்த வாழ்க்கையை நடத்தாமல் போகார்கள்" என்ற மனத்திடம் கந்தப்பருக்குப் படிப்படியாக ஏற்பட்டு

வந்தது.

அவருக்கு இப்பொழுது யாரிலும் வெறுப்புக் கிடையாது. ஒரு கிழமைக்கு முன்வரை பேச்சுப் பறைச்சலின்றி ஒருவரைக் கண்டால் மற்றவர் மறுபக்கமாக முகத்தைத் திருப்பிச் சென்ற அவரும் அப்புத்துரையும் இப்பொழுது உயிரொன்றிய நண்பாகளாகி விட்டார்கள்.

அப்புத்துரை நண்பணா? இல்லை! இவன் என் குரு. நாங்கள் இருவரும் ஒன்றாய்ப் படித்த காலத்தில் 'மொக்கன் அப்புத்துரை' என்று பெயரெடுத்த இவனா இப்பொழுது இத்தனை ஞானம் பேசுகிறான்?

அப்புத்துரை ஒருநாள் சொன்னார் 'கந்தர் நான் பகவத்கீதை படிச்சிருக்கிறன். அருச்சுனன் குருசேத்திரப் போர்க்களத்திலை வீட்டுமர் முதலான தன்ரை உறவினரைக் கண்டவேளையிலை "இவையோடை நான் எப்பிடிப் போராடுகிறது? இவையைக் கொண்டுதான் நாட்டை அடையவேண்டுமெண்டால் அந்த நாடு எனக்கு வேண்டாம். நான் காட்டிலை போய் இலைகுழையைத் திண்டு தவம் செய்யப் போறன்" எண்டு வெளிக்கிட்டானாம். அந்தவேளையில் அவனுக்குத் தேர்ச்சாரதியாயிருந்த கிட்டிணர் என்ன சொன்னாராம் தெரியுமே? "மடையா உன்ரை சொந்தக்காரர் எண்டு நீ நினைக்கிறதெல்லாம் உவையின்ரை உடலைத்தான். உயிரை அல்ல. உயிர் அணிஞ்சு கொள்ளுற சட்டைதான் உந்த உடலுகள். ஒரு உடல் போனால் இன்னொரு உடல். ஒரு பிறவிபோனால் இன்னொரு பிறவி. உன்னாலை ஒருத்தன்ரை உயிரை— ஆன்மாவைக் கொல்ல ஏலாதடா. நீ இராசா உன்ரை கடமை போர்செய்யிறது உன் மூலமாய்த் தருமத்தைக் காக்கிறது என்ரை கடன் ஆனபடியால் உந்த மயக்கத்தை விட்டிட்டு ஒரு இராசா செய்யவேண்டிய தருமத்தை—கடமையை—போரை நீ செய் "இதுதான் கிட்டிணர் சொன்னது. நாங்கள் இதுவரை எத்தினை பிறப்பெடுத்திருப்பும்? எங்களுக்குத்தான் எத்தனை தாய், தகப்பன்! யோசிச்சுப்பார். இது ஒரு நாடகம் அப்பா!. அஞ்ஞானந்தான் இந்த நாடகத்துக்கு ஆதிமூலம்" பேசாமல் இருக்கிற இன்னும் கொஞ்சநாளைக்கு "அப்பு, சாமி எங்கடை இனத்தைக் காப்பாற்று" எண்டு மண்டாடிவிட்டுப் போறவழியைப் பாப்பம்!

இதற்குப் பிறகும் மாயபந்தங்களில் கட்டுண்டு கிடக்க அவ்வளவு மடையரா கந்தப்பர்?

அப்புத்துரை. கந்தப்பர் இருவரது முகங்களிலும் முன் எப்பொழுதும் இல்லாத ஒரு மலர்ச்சி வளவில் நின்ற தூதுவளை. குறிஞ்சா. முருங்கை. முல்லை. முசுட்டை இலைகளைப் பிடுங்கி அரிசியோடு வேகவைத்து கொஞ்சம் உப்பும் புளியும் சேர்த்து ஒருநேரக் கஞ்சியாக்கி இருவரும் குடித்துவிட்டு வீதிகளிலே உல்லாசமாகத் திரிந்தார்கள்.

"என்ன அப்புமாரே! உங்களுக்கு விசரே? உயிரை வெறுத்துத் தெருக்களிலை திரியிறியள்! பேசாமல் நல்லூரிலை போய் அங்கினைக்கை கிடவுங்கோ" என்று வீதிகளிலே ஆசை அருமையாகக் காணப்பட்ட இளசும். நடுவயதும் புத்திசொன்னார்கள். கிழவர்களோ கலகல என்று சிரித்துவிட்டுத் தம் போக்கிலே சென்றார்கள்.

அந்த வேளைகளிலே. அப்புத்துரை

"நந்தவ னத்திலோர் ஆண்டி — அவன்
நாலாறு மாசமாய்க் குயவனை வேண்டிக்
கொணடுவந் தான்ஒரு தோண்டி — அதைக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி"

என்றும்

மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி"

என்றும்

எத்தாயர்? எத்தந்தை? எச்சுற்றத்தார்?
எம்மாடு சும்மாடாம்? ஏவர் நல்லார்?
செத்தால்வந் துதவுவார் ஒருவரில்லை
சிறு விறகால் தீமூட்டிச் செல்லா நிற்பர்.

என்றும் உரத்துப் பாடிக் கூத்தாடிக் தமக்கு அறிவுரை பகர்ந்தவர்கள் முன் தம்மை ஒரு கேலிக்பொருளாகப். பைத்தியகாரனாகக் காட்டத் தவறவில்லை. "பேயொன்றும் தன்மை

பிறந்து விட்டவரும் பிறந்து கொண்டிருப்பவரும்" தம்மைப்பார்த்துச் சிரித்தவர்களைத் தாம் பார்த்துச் சிரிக்கத் தொடங்கிய பொழுது......

எல்லாம் குறைப்பிரசவ நிலை.....
ஆனால்......

நல்லூர்க் கந்தசுவாமி கோயில் மட்டும் பழையபடி கோயில் ஆகக்கூடிய சூழ்நிலை உருவானது. அவன் அருள் என்றுதான் கூறவேண்டும்.

கந்தப்பர் குடும்பமும். அப்புத்துரை குடும்பமும் சரியாக ஒரு மாதத்திற்குப் பிறகு தங்கள் மூட்டை முடிச்சுக்களோடு வீடுகளுக்குத் திரும்பிய வேளையில்........ அப்புத்துரை வீட்டு முற்றத்தில்.........

மாஜி அப்புத்துரையினதும் முன்னாள் கந்தப்பசேகரத்தினதும் உடற்சட்டைகளின் எஞ்சிய பாகங்கள் எலும்புக் கூடுகளாயும் மண்டை ஓடுகளாயும் கிடந்து அவர்களை வரவேற்றன.

'சிறுவிறகால் தீமூட்டும்' சிரமத்தைக்கூட அந்தக் கிழவர்கள் பழசுகள் — ***C90***கள் தமது வழித்தோன்றல்களுக்கு வைக்கவில்லை



# பகவான் பாபா, கடல் கடந்த சாயி நிர்வாகஸ்தர்களுக்கு, பிரசாந்தி மந்தீரில் ஆற்றிய அருளுரை

*அன்புருவானவர்களே!,*

எல்லா மனிதர்களும் தன்னலம் கருதி சுயநலம் மிக்க வாழ்க்கையையே வாழ்கிறார்கள். அவர்கள் சமூக நலனையே தமது வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொள்வதில்லை. மனிதன் சமுதாயத்தின் ஓர் அங்கமாவான். ஒவ்வொருவரும் ஒரு நிறுவனம் அமைப்பதற்கான நோக்கத்தைப் புரிந்து கொள்ள வேண்டும். பெயருக்கும் புகழுக்குமாக நிறுவனம் அமைக்கப்படுவதில்லை. தான் மற்றவர்களைப் பார்க்க. உயர்ந்த ஸ்தானத்தை எடுப்பதற்காகவும் நிறுவனத்தை அமைப்பதில்லை. தனி மனிதனின் பெருமை இரு வகைகளில் பரிணமிக்கின்றது. ஒன்று ஆன்மீக கைங்கரியங்களை மேற்கொள்வதிலும் பிறருக்குச் சகாயம் செய்வதிலும் வாழ்வை அர்ப்பணிப்பதால் பெறப்படுவது. மற்றது கெடுதலான காரியங்களையே செய்து அதனால் பிரபல்யமாவது. நல்லவனாக உலகத்தோரால் போற்றப்படும் மனிதன் உதாரண புருஷனாக என்றென்றும் மதிக்கப்படுகிறான். அப்படிப்பட்டவர்களே "ஆதர்ஷ"மாக வாழ்வார்கள். கெட்டவர்கள் மற்றவர்களுடைய கவனத்தை ஈர்த்து "ஆகர்ஷணம்" அல்லது கவர்ச்சி உள்ளவர்களாக இருக்கலாம். இந்து இதிகாசங்களில் ஸ்ரீ இராமரை முன்னதற்கும் இராவணனைப் பின்னதற்கும் நல்ல உதாரணங்களாக மக்கள் அறிவர். அதேபோல் கிறிஸ்தவ மதத்தில் இயேசுவையும் யூதாஸையும் உதாரணங்களாகக் கூறலாம். இராமருடைய நாமம் பிரஸ்தாபிக்கப்படும்போது பெருமதிப்பும் புகழும் மேலோங்கும். இராவணன் பெயர் இகழப்படுகிறது. இயேசுவை நினைக்கும்போது பெருமதிப்பு ஏற்படுகிறது. ஆனால், யூதாசோ துரோகத்திற்கும் கெடுதிக்கும் உதாரணமாக நினைக்கப்படுகிறான்.

மனிதர்கள் தாங்கள் உன்னத வாழ்க்கை வாழ்ந்து

சமுதாயத்தையும் முன்னேற்றுவதற்காக நிறுவனம் அமைக்கப்படுகிறது. தனிமனிதனை நாசமாக்கக்கூடிய இரு கூறுகள் உள்ளன. ஒன்று அகந்தை மற்றது பொறாமை. பொறாமை பயிர்களை அழிக்கும் கிருமி போன்றது. ஆணவம் அல்லது அகந்தை பயிர்களை அழிக்கும் பூச்சி போன்றது. மனித வாழ்வென்னும் பயிரைப் பொறாமை உள்ளிருந்து அழிக்கும். அகந்தை வெளிப்படையாகத் தோன்றி மனிதத் தன்மையை மறைக்கும். எனவே, எமது நிறுவனத்தில் நாம் அகந்தை, பொறாமை என்பவற்றை விட்டுத் தூர அகன்று பரந்த மனப்பான்மையை வளர்த்துக் கொள்ள வேண்டும். இத் துர்க்குணங்கள் உள்ளவர்கள் தம்மையும் கெடுத்துக்கொண்டு, சமுதாயத்தையும் அவப் பெயருக்கு உள்ளாக்குகிறார்கள். எம்மால் இயன்றவரை அகந்தையையும் பொறாமையையும் குறைத்துக் கொள்ளுதல் வேண்டும்.

எல்லோரும் சேவகர்கள்தான். யாரும் எஜமானல்ல. ஒரு சின்னக் கதையை உதாரணமாகச் சொல்லலாம் ஓர் அரசன் தன் பழைய நண்பருடன் பேசிக்கொண்டிருந்தான். தான் ஒரு எஜமானென்றும், நாடு முழுவதும் தனதே என்றும் நாட்டு மக்கள் அனைவரும் தனது பணியாட்கள் என்றும் குறிப்பிட்டான். தனக்குத் தேவை எதுவுமில்லையென்றும், தானே சர்வ அதிகாரி என்றும் சொன்னான். யாருக்கும் தான் விட்டுக் கொடுக்க வேண்டியதில்லை. தான் யாருடைய சேவகனுமல்ல என்றெல்லாம் சென்னன். கேட்டுக்கொண்டிருந்த நண்பர் சிரித்துக்கொண்டு கூறினார். "அரசே, நீங்கள் தவறாக நினைக்கிறீர்கள். அரசன் முதல் ஆண்டி வரை, ஞானபண்டிதன் முதல் பாமரர் வரை அனைவரும் சேவகர்களே. யாரும் எஜமானல்ல, இறைவன் ஒருவனே எஜமான். நீரோ தனிப் பெரும் பிரபு என்று நீர் நினைத்தால் அது தவறு. அதுமடைமையின் அறிகுறி. நீயும், நானும் அனைவரும் சேவர்களே." இதனைக் கேட்ட அரசன் தன் நண்பரை நோக்கி "நீர் சொல்பவற்றை உம்மால் நிரூபிக்க முடியுமா? இரண்டு நாட்கள் அவகாசம் கொடுக்கின்றேன். மக்களைக் கேட்டு நான் எஜமானா அன்றி சேவகனா என்பதைத் தெரிவிக்கவேண்டும். நீர் கூறியவற்றை நிரூபிக்காவிட்டால் நாடு கடத்தப்படுவீர்" என்று சொன்னான். நண்பர் அதை நீங்கள் நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி, என்னை இந்த நாட்டில் வைத்திருந்தாலும் சரி அன்றி விரட்டினாலும் சரி சத்தியம் என்றும் மாறாது. சத்தியம் ஒன்றே. இரண்டல்ல." அரசன் தமது நண்பருக்கு "இரண்டு நாட்கள் அவகாசம் கொடுத்த பின் நாட்டை விட்டு வெளியே போகச் சொல்வேன்" என்றான். நண்பர் மூன்றாம் கால்

போன்ற ஊன்றுகோலுடன் வெளியே சென்றார். போகும் போது ஊன்றுகோலை நழுவ விட்டுவிட்டு "ஐயகோ! அரசே. என்னால் குனிய முடியாதே. எனக்குச் சேவகர்களுமில்லை. ஊன்றுகோல் இல்லாமல் என்னால் ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியாது. எப்படிப் போவது என்று தெரியவில்லையே என்று கூக்குரலிட்டார். தன்னுடைய நண்பரின் பரிதாப நிலையைப் பார்த்த அரசன் "கவலைப்படாதே நண்பரே நான் உதவி செய்கிறேன்" என்று கூறிக்கொண்டு ஊன்று கோலைக் குனிந்தெடுத்து நண்பரிடம் கொடுத்தான். ஊன்றுகோலைப் பெற்றுக்கொண்ட நண்பர் "நன்றி அரசே. இப்போது தாங்கள்தான் எனது சேவகன். கஷ்டப்படும்போது வந்து கைகொடுத்து உதவினீர்கள். உதவிதான் சேவையாகும் முன்னர் அகந்தையோடு யாருக்கும் பணி புரியோம் என்று சொன்னீர்கள். இப்போது உதவியற்ற நிலையிலிருந்த எனக்குநீங்கள் பணியாளர்" என்று கூறினார். தெரிந்தோ தெரியாமலோ அனைவரும் பணியாட்களாகத்தான் இருக்கின்றோம். யாரும் எஜமானல்ல.

உங்களால் எவ்வளவு தூரம் சேவை செய்ய இயலும்? நீங்கள் எவ்வளவிற்கு சேவகர்களாக இருப்பீர்கள்? இந்த உலகத்தில் அனைவருக்கும் ஏதாவது ஆசை இருக்கிறது. அதை அடையவே அவர் முயற்சிப்பார். ஏதாவது பிரதிபலனை எதிர்பார்த்தே ஒருவர் மற்றவர்களை நேசிக்கிறார். பிரதி பலன் கருதாமல் நேசிப்பவர்கள் யாரும் இந்த உலகத்தில் இல்லை. பிரதிபலன் கருதுபவர்கள் அனைவரும் சேவகர்களே. பகவான் ஒருவரே பிரதிபலன் எதுவும் வேண்டாமல் அன்பு செலுத்துகிறார். எனவே அவர் ஒருவரே எஜமான் ஆவார். உலகம் ஒரு நாடக மேடை. மனிதர்கள் எல்லாம் நடிகர்கள். கடவுளே நெறிப்படுத்தும் "டைரக்டர்" தன்னைத் தலைவனாக நினைத்து செல்வம், ஆதிக்கம் இவற்றால் வரும் அதிகாரத்தை நினைத்துப் பெருமைப்படுவது தவறாகும். சேவை செய்யக் கடமைப்பட்டிருக்கிறீர்கள் என்பதை உணர்ந்து எஜமான் போல் இருக்காது செயற்பட வேண்டும்.

பேரானந்தம் சேவை மனப்பான்மையினால் ஏற்படுகிறது. அதிகார பாவத்தினால் ஏற்படுவதில்லை. செல்வமும், அதிகாரமும் ஒருவருடைய பசியைப் போக்காது. உணவு மட்டுமே பசியைப் போக்கும். செல்வம் ஒருவருக்கும் செம்மையெனும் அழகைக் கொடுக்காது. நல்லொழுக்கம்தான் அழகைக் கொடுக்க வல்லது.

சாந்தி, சௌபாக்கியம், சந்தோஷம் இவை எப்படி உண்டாகின்றன என்பதை உணர்ந்துகொள்ளவேண்டும். ஒரு தாய், தகப்பன், மகன் மூன்று பேருமுள்ள ஒரு குடும்பத்தை உதாரணமாக எடுத்துக் கொள்வோம். மூவரும் சுமுகமாக வாழ்ந்தால் அவ்வீடே சொர்க்கமாகும். அவர்களிடையே அபிப்பிராய பேதம் ஏற்பட்டால் வீடு நரகமாக மாறிவிடும். அதேபோல் மனித உடலாகிய வீட்டுக்குள் மனம்.. வாக்கு செயல் என்ற மூவர் வாழ்கின்றனர். இம்மூவரும் ஒருமைப்பாட்டுடன் சுமுகமாக வாழ்ந்தால் உடலாகிய வீட்டில் ஆனந்தம் தவழ்கிறது அன்றி, எண்ணம் வேறு சொல் வேறு செயல் வேறாக வேற்றுமை ஏற்பட்டால் அதைவிட நரகவேதனை வேறில்லை. இவை மூன்றின் ஒருமைப்பாடு வாழ்வுக்கு மிக இன்றியமையாதது. இம்மூன்றின் ஒருமைப்பாடே தெய்வீகமாகும். ஏனெனில் இவ்வொருமைப்பாட்டினால் சித்த சுத்தி ஏற்படுகிறது. சித்தசுத்தி தெய்வீகத்தில் இட்டுச் செல்கிறது. ஆன்மீக சமூகத்தில் "திரிபூதி" எனப்படுவது அதுவே. ஆன்மீக வாழ்வுக்கு மட்டுமல்லாது உலகியல் சமுதாய வாழ்விலும் சாஸ்வதமான சாந்தியை அனுபவிக்க வேண்டுமானால் மனம் வாக்கு, செயல்களிடையே ஒருமைப்பாட்டை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

மனிதனுக்கு இன்று தேவைப்படுவது அமைதி. அமைதியை ஏற்படுத்துவதற்கு நிறுவனங்கள் அமைக்கப்படுகின்றன. இவை சாயிக்குப் பெயரும். புகழும் ஏற்படுத்துவதற்காக அமைக்கப்படவில்லை. அனைவருக்கும் சந்தோஷம் அளிப்பதே இவ்வமைப்புக்களின் நோக்கம். உலகத்தில் பல நிறுவனங்கள் இருந்தாலும் சாயி நிறுவனம் அவற்றைப் போன்று இருக்கக் கூடாது. நாம் ஒன்று சேர்ந்து செயற்பட வேண்டும். எல்லோரும் சகோதர சகோதரிகளே மனித குலம் முழுவதும் ஒரே தேவனின் பிள்ளைகள் என்ற வாக்கை நினைவில் கொள்ள வேண்டும். இது இன்றைய சமுதாயத்தில் செம்மையாகக் கடைப்பிடிக்கப்படுவதில்லை. நான்தான் இணைப்பாளர். எனக்குக் கூடத் தெரியும். மற்றவர்கள் பேசாதீர் என்ற எண்ணத்தைக் கைவிட்டுவிட வேண்டும். நீங்கள் சும்மா பெயருக்கே இணைப்பாளர். எல்லோரும் சேவகர்களே. நீங்கள் சேவகர்களின் தலைவனாக இருக்கலாம். சேவக தலைவன் முன் நடக்க மற்றைய சேவகர்கள் பின் செல்வர். ஆனால் தலைச் சேவகன் தன்னை எஜமானென்று நினைத்து வாழாதிருந்தால் யாரும் அவரைப் பின்பற்றார். இணைப்பாளர் செயலில் முன்நிற்க வேண்டும். அப்போதுதான் மற்றவர்களை ஏவும் அதிகாரத்தை அவர் சம்பாதித்துக்கொள்ளலாம். நீங்கள் எதுவும் செய்யாவிட்டால்

மற்றவர்களை ஏவும் அதிகாரம் உங்களுக்கு இல்லை. மற்றவர்கள் மதிக்க மாட்டார்கள். வாஸ்தவமான கௌரவத்தைப் பெறுவதற்கு நீங்கள் சொல்வதைச் செயலிலும் காட்ட வேண்டும். முதலில் ஆதர்ஷ் ஆகுங்கள். இரண்டாவதாகச் செய்து காட்டுங்கள். மூன்றாவதாகச் சொல்லுங்கள். தான் ஆகாமலும், செய்யாமலும் மற்றவர்களுக்குச் சொல்ல முடியாது. எங்களுடைய நிறுவனத்தில் எல்லாரும் கடினமாக உழைக்கிறார்கள். ஆனால், ஆன்மீகப் பாதையில் எதைச் செய்யவேண்டும்? எப்படிச் செய்ய வேண்டும்? என்ற ஒழுங்கு தெரியவில்லை. இவை தெளிவாக்கப்பட வேண்டும். எல்லாரும் சுறுசுறுப்பாய் இருக்கிறார்கள். சுறுசுறுப்புடனும் உற்சாகத்துடனும் இறைவனைச் சார்ந்து சந்தோஷத்தைப் பெறவேண்டும். "இறைவனில்லாத இடமில்லை. எதைச் செய்தாலும் தெய்வச் செயலாகவே பாவித்துச் செய்ய வேண்டும். இந்த உடம்பைக் கொண்டு கடவுளே செய்கிறார். இந்த மனத்தின் ஊடாக அவரே செயற்படுகிறார். இந்தக் கரங்களின் ஊடாக அவரே கடமையாற்றுகிறார். இந்த மனப்பாங்குடன் வேலை செய்தால் அகந்தை மேலோங்குவதற்கு இடமில்லை. உடல் என்பது மின்சார நெகட்டிவ் போன்றது. அது ஜடம். மனம் என்பது ஆசைகளின் கொத்தாகும். அது கற்பனை மயமானது. நீ ஒரு கற்பனை உருவல்ல. ஜடமும் அல்ல. நீ ஆத்மா எனவே நான் ஆத்மா, நான் ஆத்மா" என நினைவுறுத்திக் கொள். . அந்த நினைவுடன் நீ எந்தக் கைங்கரியத்திலும் ஈடுபடலாம். வேறு யாருக்கோ சேவை செய்கிறோம் என்று நினைக்கக் கூடாது. சேவைகள் எல்லாம் செய்வது எனக்கே என எண்ணிக்கொள்ள வேண்டும். ஏனெனில் நீயே சர்வ வியாபகமான ஆத்மா. ஏகாக்கிரக புத்தி ஏற்பட வேண்டும் இராமா, கிருஷ்ணா, இயேசு அல்லாஹ் என்று எந்தப் பெயரைக் கொண்டும் கடவுளைக் கூப்பிடலாம். எல்லாம் ஒன்றே. நாம ரூபங்கள் வேறானாலும் இறைவன் ஒருவரே. இந்த உணர்வுடன் சேவையில் ஈடுபடுங்கள். எமது நிறுவனத்தின் சேவைகளில் அதிகாரத்தைக் காட்டக் கூடாது. அன்பைக் காட்டி அதையே போதிக்க வேண்டும். அதிகாரத்தைக் காட்டப் பார்த்தால் வேற்றுமைகள் தோன்றும். சில சமயங்களில் குரலைக் கடுமையாக்கிக் கொள்ளலாம். ஆனால் இருதயத்தைக் கடுமையாக்கக் கூடாது. இருதயங்களுக்கிடையே அன்பு என்னும் தொடர்பு இருக்கிறது. சுவாமியும் சில சமயங்களில் அப்படியே நடந்து கொள்கிறேன். மாணவர்கள் ஒழுங்காக நடக்காவிட்டால் சுவாமி முதலில் "பங்காரு அப்படிச் செய்யாதே" என்று சொல்வேன். திருந்திக் கொள்ளாவிட்டால் சுவாமியும் உரத்துப் பேசுவேன். இருந்தும் சுவாமியினுடைய அன்பு மாறுவதில்லை. இதன்படியே நீங்களும்

செயற்பட வேண்டும். அவசியம் ஏற்படும்போது கண்டிப்பாகப் பேசலாம். வெறுப்புக்கு இடம் அளிக்கக்கூடாது.

இன்று உலகத்தில் அமைதி பெரிதும் வேண்டப்படுகிறது. தெய்வீக அன்புருவானவர்களே! சேவை ஒரு ஆன்மீக சாதனை. அதை வெறும் உதவி என்று நினைக்கக் கூடாது. வெறும் ஜெபம். தியானம் மட்டும் ஆத்மீக சாதனை ஆகாது. சேவையே மிக உயர்ந்ததும் புனிதமானதும் துரிதம் ஆனதுமான சாதனையாகும். தியானத்தில் அமர்கிறீர்கள். ஒரு வினாடியாவது மனம் ஒருமிக்க முடிகிறதா? ஜெபம் செய்கிறீர்கள். மனம் ஒருமித்து செய்ய முடிகிறதா? நாளாந்தம் இயந்திரம்போல் செயற்படுகிறீர்கள். அது சரி அல்ல. அப்படி நேரத்தைச் செலவிடுவதிலும் பார்க்க சென்று சமூக சேவை செய்யுங்கள். ஆனால் சேவையின்போது இறைவனுக்குச் செய்யும் தொண்டாக நினைத்துச் செய்யுங்கள். அப்போது அகந்தை அகலும். எல்லாரிடத்திலும் சகோதரத்துவம் நிலவ வேண்டும். உண்மையான செல்வம் எது? அன்பே சிறந்த செல்வம். அதுவே சாஸ்வதமானது. கொடுக்கக் கொடுக்கக் கூடும் செல்வம் அன்பே. பொன்னல்ல. இந்த உண்மையை நீங்கள் கண்டுகொள்ள வேண்டும் சமூக சேவை செய்வதற்கு எவருக்கும் சுயநலம் ஆகாது. ஆன்மீக உணர்வு ஏற்பட வேண்டும். தனி ஒரு மனிதனால் உலகத்தைத் திருத்த இயலாது. பலர் சேர்ந்து பந்தோபஸ்தைப் பலப்படுத்திக்கொள்ள வேண்டும். உதாரணமாக ஐந்து விரல்களைப் பாருங்கள். ஐந்து விரல்களும் ஒன்று சேர்ந்தால் கருமங்கள் செய்யலாம். உதாரணமாக இந்த கைலேஞ்சியைத் தூக்கலாம். தனி ஒரு விரலினால் கேவலம். ஒரு கைலேஞ்சியைக் கூடத் தூக்கமுடியாது. ஐந்து விரல்களும் சேர்ந்தால்தான் பயனுண்டு. சாயி நிறுவனத்தில். சாயி சமித்தி. சாயி சேவாசனம். சாயி கல்வி வட்டம். சாயி பால விகாஸ். சாயி ஸ்தாபனம் இவை அனைத்து அங்கங்களும் ஒருங்கிணைந்து செயற்பட வேண்டும். அதுவே ஒருமை. இந்த ஒற்றுமையே ஒருமை. அமைப்பிற்குள் ஒவ்வொருவரும் தனக்கு அளிக்கப்பட்ட கடமைகளை நிறைவேற்ற வேண்டும். பெருமைக்குரியது. சில்லறையானது என வித்தியாசம் பாராட்டாது ஒவ்வொருவரும் தத்தமது கடமையைச் செய்தால் சுபிட்சம் ஏற்படும். ஒரு சின்ன உதாரணம் இன்று அணுசக்தியால் உந்தப்படும் ஏவுகணைகள் இருக்கின்றன. அவற்றில் அநேக உபகரணங்கள் பொருத்தப்பட்டு இருக்கின்றன. ஏவுகணைகளை நாம் பிரமாண்டமான தனி இயந்திரங்களாக எண்ணுகிறோம் ஆனால் அதன் உள்ளே பூட்டாணி. திருகாணி. கம்பிகள். ஊசிகள் போன்ற பல பகுதிகள் உரிய

இடங்களில் பொருத்தப்பட்டு இருக்கின்றன. இந்த இயந்திரத்தில் ஒரு ஆணி தானும் விலகிவிட்டால் ஏவுகணைக்கு என்ன நேரும் என்று கொல்ல இயலாது. ஒவ்வொரு ஆணியும் இன்றியமையாதது. அகுதின்றி ஏவுகணை மோதி எரிந்து சாம்பலாகலாம். அதேபோல் நிறுவனத்தில் அனைவரும் அத்தியாவசியம் ஆனவர்கள். அவர் பெரிது. இவர் சிறுது என்ற பேதங்கள் கூடாது. சாயி நிறுவனம் பிரமாண்டமான இயந்திரத்தைப் போன்றது. அதில் ஒவ்வொருவரும் தமது கடமையைச் செவ்வனே செய்ய வேண்டும். ஒருவர் திருகாணி போன்றவர் ஆனால் இன்னொருவர் பூட்டாணி போன்றவர் ஆகலாம். ஆனால் இருவரும் இயந்திரச் செயற்பாட்டிற்கு அவசியமானவர்களே. இதை வேற்றுமையில் ஒற்றுமை என்கிறோம். இந்த ஒற்றுமை இருந்தால் எம்மாமல் எதையும் சாதித்து நிறைவேற்ற முடியும். ஒரு துணி இருக்கிறது. அதைக்கிழிப்பது கஷ்டமாக இருக்கிறது. என்ன காரணம்? அதன் நூல்கள் இறுக்கமாகப் பின்னப்பட்டிருப்பதால்தான். ஒவ்வொரு நூலாகப் பிரிந்துட்டால் இலேசாகக் கிழித்துவிடலாம். ஆனால் நூல்கள் ஒன்றாகப் பின்னிப் பிணைந்திருக்கும்போது மிகப் பலம் வாய்ந்ததாக இருக்கின்றன. தனித்தனியாக இருக்கும் போது மனிதர் பலவீனமானவர். ஒன்று சேர்ந்து நிற்கும்போது பாரிய சக்தியுடையவர்கள் ஆவார்கள் ஒற்றுமையிலே பலம் தங்கியுள்ளது. ஒற்றுமையிலேயே சமூக நலம் தங்கியுள்ளது. ஒற்றுமையே ஆன்மீகத்தை வளர்க்கும் ஒற்றுமையே நாட்டில் சுபிட்சத்தை ஏற்படுத்தும். சுபிட்சம் வானத்திலிருந்து வரமாட்டாது. எனவே எல்லோரும் ஒற்றுமையாகச் செயற்பட வேண்டும். எல்லோரும் சுவாமியிடத்தில் மிக்க அன்புடையவர்களாக இருக்கிறீர்கள். ஆனால் சுவாமியைப் பின்பற்றுவதில்லை. என்ன பிரயோசனம்? சுவாமியிடத்தில் பக்தி இருந்தால் சுவாமி சொல்வதைக் கேட்டு நடக்க வேண்டும். உங்களில் சிலருக்கு பகவத் கீதையையும், அருச் சுனனையும் தெரியாமல் இருக்கலாம். அருச்சுனன் மிகுந்த புத்திசாலி. உயர்ந்த அறிவாளி. கிருஷ்ணனோடு மீண்டும் தர்க்கித்தான். இந்தத் தர்க்கம் கீதையில் இரண்டு அத்தியாயங்களில் காணப்படுகிறது. அருச்சுனன் களைத்து ஓயும் வரைக்கும் கிரிஷ்ணர் பொறுத்திருந்தார். பின்னர் கிருஷ்ணர் கேட்டார் அருச்சுனா. முடிந்துவிட்டதா உனது பேச்சு? இனி நான் பேசட்டுமா?" "அப்படியே சுவாமி" என்றான் அருச்சுனன். கிருஷ்ணன் அருச்சுனனுக்குச் சென்னார் "ஈது எல்லாம் வீண் கால விரயம். உன் அறிவில் சமன்பாடு இல்லை. சமன்பாடு செவ்வையாக இல்லாமல் மனித குலம் முன்னேற முடியாது. நீ அறிவைச் செழிக்கச் செய்வதிற்குப் பதிலாக அறிவை அழித்துக் கொள்கிறாய். அறிவைச் சீராக்கினால் வாழ்வில் சமநிலை

ஏற்படும். வாழ்வில் சமநிலை அற்ற நிலையில் அறிவைச் செழிக்கவைப்பதென்றால் என்ன? கற்றபடி ஆன்மீக பாதையில் ஒழுகி முன்னேறுவதுதான் அறிவைச் செழிக்கச் செய்யும் வழி. நல்லதையே பார்த்து. நல்லதையே பேசி. நல்லதையே செய்தால் அறிவு செழிக்கும். தீயவற்றைப் பார்த்து தீயவற்றைப் பேசி. தீயனவே செய்தால் அறிவு அழியும்.. தெரிந்தோ தெரியாமலோ நாம் அறிவை அழித்துக்கொண்டிருக்கிறோம். அருச்சுனா பேச்சை விட்டு விட்டு நான் சொல்வது போல் காரியங்களைச் செய்" என்று கிரிஷ்ணர் சொன்னார். அருச்சுனன் இரு கைகளையும் கூப்பி "கரிஷ்யே வசனம் தவ" நீ சொன்னபடியே செய்கிறேன். நீ சொல்வது எதுவோ. அதுவே எனக்குச் சிறந்தது. உனது புத்திமதிகளைப் பின்பற்றுகிறேன்" என்றான். அதன்பின் கிருஷ்ணர் அருச்சுனனை மிக உயர்ந்த ஸ்தானத்திற்கு உயர்த்தினார். இறைவன் கட்டளைகளை சரி பிழை விளக்கம் பார்க்காது கீழ்ப்படிய வேண்டும். ஏனென்றால் அக்கட்டளைகள் உங்கள் நன்மைக்காகவே இடப்பட்டன. நற்கருமம் செய்தால் உங்களுக்கே நன்மை உண்டாகும். தீயவை செய்தால் உங்களுக்கே கெடுதி ஏற்படும். சுவாமிக்கு இலாபமோ. நஷ்டமோ இதனால் இல்லை. சுவாமி எப்போதும் ஆனந்தமயமாக இருக்கிறேன். நீங்களும் அப்படியே இருக்க விரும்பினால் சுவாமியைப் பின்பற்றுங்கள் நிறுவனத்திற்காக சுவாமி இட்ட சட்டதிட்டங்களின்படி நடந்துகொள்ளுங்கள். அப்பொழுது மனத்திலும். உடலிலும் சாந்தியும் சமுதாயத்தில் அமைதியும் பாதுகாப்பும் ஏற்படும்.

தெய்வீக அன்புருவானவர்களே! நடந்தவை நடந்துவிட்டன. மீண்டும் வரப்போவதில்லை. எதிர்காலம் இன்னும் உங்கள் கைக்கு வரவில்லை எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். நிகழ்காலத்திலேயே வாழுங்கள். இது சாதாரணமான நிகழ்காலமல்ல. இதில் சர்வ காலமும் நடந்ததும் நடக்கப் போவதும் அடங்கியிருக்கிறது. மகிழ்ச்சியாக இருங்கள். சிறந்தனவற்றையே செய்யுங்கள். அவர் அன்று அப்படிச் சொன்னார். இவர் இப்படிச் சொன்னார் என்று கடந்தகால வாக்குவாதங்களை நினைத்து வெறுப்பை வளர்த்துக் கொள்ளாதீர்கள். அவற்றையெல்லாம் மறந்துவிட வேண்டும் மற்றவர்களைப் பார்த்து வெறுமனே 'ஹலோ.' 'ஹலோ' என்று விளிப்பதில் என்ன பிரயோசனம்? மற்றவர்களை வெறுப்பின்றி முழுமனத்தோடு விளித்து அழைக்க வேண்டும் எண்ணமும். சொல்லும். செயலும் இணைய வேண்டும் அப்போது முழு உலகமும் உங்கள் கைவசமாகும். இன்று உலகம் முழுவதும் பிரசாந்தி நிலையத்திற்கு வந்திருக்கிறது. என்ன காரணம்?

சுவாமியுடைய அன்பே காரணம் சுவாமி எதைப் போதிக்கிறேனோ அதையே செய்கிறேன். இதனால்தான் உலகம் முழுவதும் சுவாமியிடம் ஈர்க்கப்படுகிறது. நீங்களும் இறை தூதுவர்கள்தான். உங்களிலும் இந்தச் சிந்தனை சொல், செயல் ஒருமைப்படு ஏற்பட்டால் உலகம் முழுவதும் சாய் நிறுவனமாக மாறும்.

கேட்பவர்கள் கேட்பவற்றையெல்லாம் கொடுக்க முடியாவிட்டாலும் நயமாக மறுக்கலாம். முன் விட்ட தவறுகளால் சிலரிடம் இப்போது பொறாமையும் பெருமிதமும் காணப்படுகிறது. ஆனால், அப்படியே வாழ வேண்டும் என்பதில்லை. அவர் ஜெர்மன், அவர் அமெரிக்கர், மற்றவர் அவுஸ்திரேலியர், இவர் இந்து, அவர் கிறிஸ்தவர் — இவை போன்ற பாகுபாடுகளுக்கு நிறுவனத்தில் இடம் அளிக்கக் கூடாது. இயேசு சொன்னார் "மகனே அனைவரையும் ஒரே மாதிரிப் பாவித்துக் கொள்." இறைவன் ஒருவரே அனைத்து உருவத்தையும் தாங்கிக் காட்சி தருகிறார். இந்த ஒருமையை எல்லாரிலும் காணலாம். ஒன்று (1) என்ற எண் இருக்கிறது. ஒன்பது (9) என்ற எண்ணும் ஒருக்கிறது. இவை இரண்டிலும் எது பெரியது? உலகியலில் 9ஐ பெரிய எண்ணாக மதிப்பர். ஆனால் ஆத்மீகத்தில் 1 தான் பெரிய எண். எப்படி? 1 தான் ஒவ்வொன்றாக இணைந்து 9தை உருவாக்குகிறது. 1 என்ற எண் இல்லாவிட்டால் 9 என்ற எண்ணும் உருவாக முடியாது. நாம் பெரிய எண்ணிக்கை கொண்டவர்கள் என்று நினைத்துப் பெருமைப்பட வேண்டாம். எண்ணிக்கையில் சிறிதாய் இருந்தாலும் 1 என்பதுதான் தன்மையால் விசாலமானது. தன்மை இயல்பு இன்றி தானங்களால் பிரயோசனம் இல்லை.

தெய்வீக அன்புருவானவர்களே! நீங்கள் எல்லோரும் ஒன்றிணைந்து லோகச் சேமத்திற்காக (உலக நன்மைக்காக) உழைக்கிறீர்கள். அதுவே நாட்டு நன்மைக்கான சேவையும் ஆகும். அரசினால் ஆற்றப்படுபவை அலகு அலகாகப் பிரிந்து இருக்கின்றன. ஆனால், அன்பினால் ஆற்றப்படுவதோ ஒருங்கிணைந்து இருக்கின்றது. நாம் சகல நாடுகளின் நன்மைக்காகவும் உழைக்க வேண்டும் 'லோகா சமஸ்த்தா சுகினோ பவந்து' என்பதே எமது குறிக்கோளாக இருக்க வேண்டும். தேசங்கள் பலவாயினும் பூமி ஒன்றே. நட்சத்திரங்கள் பலவாயினும் வானம் ஒன்றே. ஆபரணங்கள் பலவாயினும் ஒரே பொன்னால் ஆனவையே ஒத்த ஒரு மனதோடு நாங்கள் செயற்பட வேண்டும். வேற்றுமையில் ஒற்றுமை என்பது அதுவே. நான் இங்கிருந்தாலும் நீங்கள் எங்கிருந்தாலும் உயிர் மூச்சு

ஒன்றுதான். உடன்பிறப்பு போன்ற நீங்கள் ஒரே உயிர் மூச்சையே கொண்டிருக்கிறீர்கள். இத்தகைய அத்யாத்மீக அன்போடு நிறுவனத்தை சேவை மனப்பாங்கோடு கட்டி எழுப்ப வேண்டும். பலர் முழுமனதோடு செயற்பட்டாலும் அறியாமையால் சில தவறுகள் நேர்ந்துவிடுகின்றன. சுவாமி மேல் உங்களுக்குள்ள அன்பு உங்களுக்கு அனைத்து சக்திகளையும் கொடுக்கும். அதுவே முன்னிற்க வேண்டும். அதைப்பற்றிச் சந்தேகம் இன்றி முன்னேறுங்கள். அதுவே முக்கியம். அதனால் உங்களுக்குச் சகல வெற்றிகளும் கிட்டும். ஆன்மீக வாழ்க்கையே சிறந்தது. வேறு எந்த நெறியிலும் இதில் கிடைக்கும் சந்தோஷத்தை, ஆனந்தத்தை அனுபவிக்க முடியாது.

உலகத்தில் பல ஆன்மீக நிறுவனங்கள் இருந்தாலும், அவற்றிற்கும் சாய் நிறுவனத்துக்குமிடையே பெரிய வித்தியாசம் இருக்கிறது. சாய் நிறுவனத்தில் எல்லாரும் ஒரே தாயின் பிள்ளைகள் போல் இருக்கிறார்கள். அதுதான் சாய் நிறுவனத்தின் தனிப் பெருமை. ஜெர்மன் ஒருவருக்கு சீனரைப் பிடிக்காதிருக்கலாம். சீனருக்கு அமெரிக்கரைப் பிடிக்காமல் இருக்கலாம். ஆனால் பிரசாந்தி நிலையத்தில் ஜெர்மனியர், சீனர், ரஷ்யர் அனைவரும் ஒரே மண்டபத்தில் ஒன்றாக வாழ்கின்றனர். அதுவே சாய் நிறுவனத்தின் தனிச் சிறப்பு. இந்த வேற்றுமையிலும் ஒற்றுமை என்பதை வேறு எங்கே காணலாம்! இந்தப் பெண் இரான் நாட்டிலிருந்து வந்திருக்கிறார். அடுத்தவர் ஈராக்கிலிருந்து வந்திருக்கிறார். ஈராக்கும் ஈரானும் எதிரிகள். ஆனால் இவர்கள் இருவரும் இங்கே அன்பால் இணைந்து ஒன்றாக வாழ்கிறார்கள். இத்தகைய அன்பு வளர்க்கப்பட்டால் உலகம் முழுவதும் ஒன்றாகி விடும். அன்பாலேயே அனைத்தையும் சாதிக்க வேண்டும். அன்புடனே நாளைத் தொடங்கி, அன்பாலேயே நிறைத்து, அன்புடனே நாளை முடித்துக் கொள்ளுங்கள். அதுவே இறைவனை அடையும் மார்க்கம். இறைவனிடத்தில் அன்பு செலுத்துவதற்குச் சிறந்த மார்க்கம் அனைவரையும் நேசித்து அனைவருக்கும் பணி செய்தல் ஆகும். அதுவே எனது முதல் உபதேசமும் கடைசி உபதேசமும் ஆகும். ஆரோக்கியமான, ஆனந்தமான, அமைதியான ஆன்மீக வாழ்க்கை வாழ அனைவரையும் அன்புடன் ஆசீர்வதிக்கிறேன்.

***பகவான் பாபா***

# குருவும் சீடனும் கூடிப்பேசினர்

**"உருவ வழிபாடுபற்றி ஓர்இனிய உரையாடல்"**

**291வது குருமகா சந்நிதானம்**

**ஸ்ரீல ஸ்ரீ சோமசுந்தர ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

***—மதுரை ஆதீனம்***

சீடன்— அருளே உருவாயமைந்த குருநாதா! தங்கள் திருவடிகட்கு வணக்கம்! இன்று அடியேனுக்கு "உருவ வழிபாடு" சம்பந்தமான சில ஐயங்களை விளக்கியருள வேண்டுகிறேன்.

குரு— அன்புள்ள மாணவனே! உனது ஐயங்களை நீ தெரிவித்தால், உனக்கு அதனைப் பற்றிய உண்மைகளை விளக்குகிறோம். கூறுவாயாக!

சீடர்— சுவாமி! ஆண்டவனை வழிபடுவது எப்படி? என்று அறிய விரும்புகிறேன்.

குரு— ஆண்டவனை மனதினால் நினைந்து வழிபடலாம். வாயினால் புகழ்ந்து பாடி வழிபடலாம். உடலினால் தொழுது வழிபடலாம்.

சீடர்— சுவாமி! எனது ஐயப்பாடு இதுவல்ல. ஆண்டவனை உருவம் வைத்து வழிபடுவதா? அல்லது உருவம் இல்லாமல் அருவமாக வழிபடுவதா? என்பதே.

குரு—அப்பா, அண்டவனை ஓர் உருவத்திலும் வழிபடலாம். உருவமில்லாத அருவமாயும் வழிபடலாம்.

சீடர்—அப்படியானால், அண்டவன் உருவத்தோடும் உருவமில்லாமலும் இருக்கிறான் என்றா சொல்கிறீர்கள்?

குரு—ஆமாம் அதனாலேயே இறைவனும், உருவம் வைத்து வழிபாடு செய்கின்றவர்களுக்கும், உருவமில்லாமல் வழிபாடு செய்கின்றவர்களுக்கும் பலன் ஒன்றுபோலவே கொடுக்கின்றான்.

சீடர் — அதென்ன சுவாமி! அப்படிச் சொல்கிறீர்கள்! உருவமில்லாமல் வழிபாடு செய்வதுதான் ஆகச் சிறந்த வழிபாடென்றும், உருவம் வைத்து வழிபட ஆண்டவனுக்கு உருவமேகிடையாதென்றும் அல்லவா, படித்தவர்கள் சொல்கிறார்கள்.

குரு — அப்படிச் சொல்லுகிற அவர்கள், ஆண்டவனுடைய உண்மையான நிலையைத் தெரியாது சொல்லியிருப்பார்களே தவிர உண்மை நிலையை உணர்ந்து கூறியதல்ல. ஆண்டவன் அருவும், உருவும், அருவுருவும் ஆகிய மூன்று நிலைகளில் விளங்கித் தோன்றுவான் என்பதை.

*"அருவுமாகுவன். உருவமுமாகுவன், அருவும்,*
*உருவுமில்லதோர் தன்மையும் ஆகுவன், ஊழின்*
*கருமமாகுவன, நிமித்தமும் ஆகுவன. கண்டாய்*
*பரமனாடலை யாவரே! பகர்ந்திடற் பாலார்"*

என்று "கந்தபுராண சூரனமைச்சியற்படல " 126 செய்யுள் விளங்கக் கூறுகின்றதல்லவா?

சீடர் — நீங்கள் சொல்லுகிற ஆண்டவன் உருவமுடையவனானால் அவன் அங்கு, இங்கு எனாதபடி — எங்கும் பிரகாசமாய் — நீங்கமற நிற்கின்ற நிலைக்குப் பங்கம் வருமல்லவா?

குரு — மாணவ! நீ சொல்லுகிறபடி எங்கும் வியாபகமாய் உள்ள அவனுக்கோ? அவனுடைய சக்திக்கோ? யாதொரு பங்கமும் ஏற்படாது. அவனுடைய சக்தி எங்கும் பிரகாசமாய் இருப்பதைத்தான். அவரே எங்கும் இருக்கிறார் என்று சொல்கிறோம்.

சீடர் — தாங்கள் சொல்வது எனக்குத் தெளிவாய்ப் புரியவில்லையே?

குரு — அப்படியா? அதற்கு ஓர் உதாரணம் சொல்லுகிறேன். நீ சூரியனைப் பார்க்கின்றாயா?

சீடர் — ஆம் பார்க்கிறேன்

குரு — சூரியன் ஒரு சிறிய வட்டமாய் ஓர் இடத்தில் தோன்றினாலும். அதனுடைய இயல்பாகிய சூடும், வெளிச்சமும் உலகமெல்லாம் வியாபித்திருக்கிறதல்லவா?

சீடர் — ஆம், சுவாமி

குரு — எப்படிச் சூரியன் ஒரு வட்டவடிவத்தில் ஓரிடத்தில் நம்முடைய கண்ணுக்குக் காணப்பட்ட போதிலும் அதனுடைய எங்கும் பரந்திருக்கிற சக்திக்கு வல்லமையுள்ள ஆண்டவன் ஓர் உருவத்தில் காட்சியளித்தாலும் அவனுடைய பரந்த வியாபக சக்திக்கு யாதொரு பங்கமும் ஏற்படாது.

சீடர் — சூரியனைக் கண்ணால் பார்க்கிறேம். சூரியனுடைய சக்தியையும், ஒளியையும், வெப்பத்தையும் நாம் உணர்கிறோம். ஆனால் ஆண்டவனை உருவத்தில் பார்க்கவும் முடியவில்லை — அவருடைய ஆழ்ந்து, அகன்ற சக்தியை உணரவும் முடியவில்லையே?

குரு — நம்முடைய கண்ணுக்குப் புலனாகின்ற சூரியனையும், அதனுடைய தன்மையையும் உணர்ந்துகொள்வதுபோல, ஆண்டவனையும் அவனுடைய முடிவில்லா ஆற்றலின் வியாபகத்தையும் உணர்ந்து கொள்ள முடியாதுதான்.

சீடர் — அப்படியானால், அவரை உணர்வது எப்படி?

குரு — பாலிலிருந்து வெண்ணெயைக் கடைந்து எடுப்பது போலவும், மூங்கிலோடு மூங்கிலை உராய்ந்து தீயை வெளிப்படுத்துவது போலவும், பக்தியைத் தீவிரமாக உடையவர்கள் தங்கள் பக்தியின் வலிமையால் உருவத்தில் ஆண்டவனையும், அவனுடைய வியாபகமான அருளாற்றலையும் இலகுவாக உணர்வார்கள். இதனையே திருநாவுக்கரசு சுவாமிகளும்,

> ***"விறகிற்றீயினன், பாலிற்படு நெய் போல்,***
> ***மறைய நின்றுளன், மாமணிச் சோதியான்***
> ***உறவு கோல் நட்டு, உணர்வு கயிற்றினால்***
> ***முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே"***
> ***என்று கூறியருளியுள்ளார்கள்.***

சீடர் — சுவாமி! பாலிலிருந்து வெண்ணெயை எடுக்கப் பாலைப் பார்க்கிறோம், கல்லிலிருந்தும், மூங்கிலிருந்தும் தீ உண்டாவதற்கு அந்தந்தப் பொருளைப் பார்க்கிறோம். ஆனால், காணாத கடவுளைத் தீவிர பக்தி கொண்டு காணுவது எப்படி?

குரு — அப்படியா? காணாத பொருளிலிருந்து காணும் பொருள் வெளிவருவதை, நீ பார்த்ததில்லையோ?

சீடர் — அப்படிப் பார்த்ததாக நினைவில்லையே!

குரு — சூரியனுடைய கதிர்களைக் கண்ணால் பார்க்க முடிகின்றதா?

சீடர் — இல்லை, பார்க்க முடியவில்லை

குரு — கண்ணால் பார்க்க முடியாத சூரிய கிரணங்களிலிருந்து, கண்ணால் பார்க்கக்கூடிய நெருப்பு உண்டாவதை நீ பார்த்ததில்லை போலும்?

சீடர் — ஆம், சுவாமி! பள்ளிக்கூடத்தில் நான் படிக்கும்போது, காந்தக் கண்ணாடி மூலம் சூரியகிரணத்திலிருந்து நெருப்பு உண்டாவதைப் பார்த்திருக்கிறேன்.

குரு — எப்படி ஒரு பஞ்சின்மேல் கண்ணுக்குக் காணாத சூரிய கிரணங்களைக் காந்தக் கண்ணாடி மூலமாக ஒருமுகப்படுத்தி செலுத்துங்கால், அப் பஞ்சில் நெருப்பு உண்டாகிறதோ, அப்படியே, நம்முடைய ஐந்து புலன்கள் வழியாக நாம் பிற பொருள்களிடத்தில் செலுத்துகின்ற "அன்பை" "வழிபாடு" என்னும் காந்தக்கண்ணாடி மூலம் ஆண்டவனை நோக்கி ஒருமனப்பட்டுச் செலுத்தினால், அவன் அங்கு வெளிப்பட்டு அருள்புரிவதைப் பார்க்கலாம்.

சீடர் — சுவாமி! தாங்கள் சொல்வது அவ்வளவு பொருத்தமாகத் தெரியவில்லையே?

குரு — என்ன தெரியவில்லை?

சீடர் — கிரணங்களைக் காந்தக்கண்ணாடி மூலம் செலுத்தினால் நெருப்பு உண்டாகும் என்று சொல்வது சரி. அதுபோல மனிதனுடைய அன்பை ஒருமுகப் படுத்தினால் ஆண்டவன் வெளிப்பட்டு தோன்றுவான், என்றால் அது எப்படிப் பொருந்தும்?

குரு — ஏன் பொருந்தாது?

சீடர் — "கிரணம்" நெருப்பின் தன்மையை உடையது. "அன்பு" எப்படி ஆண்டவனது தன்மையாகும்?

குரு — அதையா கேட்கின்றாய்? "திருமூலநாயனார்"

***"அன்பும்" சிவமும் இரண்டென்பர் அறிவிலார்***
***அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்***
***அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்***
***அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே"***

என்று கூறிய அருமைத் திருவாக்கை நீ படித்ததில்லையோ?

***தொடரும்......***

# இந்திய தத்துவ சிந்தனைகளும்.
## உபநிஷதமும் — சில அறிமுகக் குறிப்புகள்

*— கலாநிதி நா. சுப்பிரமணியன்*

மனிதனுக்கும் புறவுலகுக்குமிடையிலான தொடர்புகளை ஆராயும் நோக்கில் பல்வேறு தத்துவ சிந்தனைகள் இந்திய மண்ணில் முளைவிட்டன. உலகாயதம், சமணம், பௌத்தம், சாங்கியம், யோகம், வைதம், துவைதம், சைவசித்தாந்தம் ஆகிய தத்துவ வகைகளாக இவை வளர்ச்சி பெற்றன. இவற்றுட் சாங்கியம் முதலிய ஐந்தையும் ஐவகைத் தரிசனங்கள் எனவும் அத்வைதம் முதலிய மூன்றையும் மூவகை வேதாந்தங்கள் எனவும், தொகுத்துச் சுட்டுவது மரபு. மேற்குறித்த தத்துவ வகைகள் யாவற்றினதும் மூலக் கருத்தோட்டங்களை நாடுவோர்க்குக் கிடைக்கும் கால முதன்மையுடைய சான்றாதாரங்கள் வேத இலக்கியங்கள் ஆகும் கி.மு. 1500 ஆண்டுகள் வரை தொன்மை வாய்ந்தனவான வேத இலக்கியங்களிற் கருக்கொண்டிருந்த தத்துவ மூலங்களை ஆதாரங்களாகக் கொண்டவை என்ற வகையிலும் அவற்றை மறுத்து எழுந்தவை என்ற வகையிலுமே இந்திய தத்துவப் பிரிவுகள் முறையே வைதிகம் அவைதிகம் என்று பாகுபாடுத்தப்பட்டன உலகாயதம், சமணம், பௌத்தம் என்பன அவைதிக தத்துவங்கள் எனப்படுவன. ஏனைய யாவும் பொதுவாக வைதிக தத்துவங்களாகக் கொள்ளப்படுவன. இவ்விரு வகைக்கும் மூலகாரணமாகவோ அல்லது எதிர்மறைக் காரணியாகவோ அமைந்தவை வேத இலக்கியங்கள் என்பது இந்திய தத்துவவியலாளர்களது கருத்தாகும்.

வேத இலக்கியம் என்ற சொற்றொடர் இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் ஆகிய நால்வகை வேதங்களையும் குறிப்பது. இவ்வேதங்கள் ஒவ்வொன்றும் சம்ஹிதை, பிராம்மணம், ஆரண்யகம், உபநிஷதம் எனப்படும் பிரிவுகளை உடையன. இவற்றுள் முதலாவதான சம்ஹிதை என்ற பகுதியில் — குறிப்பாக இருக்குவேதத்தின் சம்ஹிதையில் — தத்துவ சிந்தனைக்கான ஆரம்ப ஐயவினாக்கள் சிலவற்றையும் சில கருதுகோள்களையும்

அவதானிக்கலாம். இவ்வுலகுக்கும் புறம்பான ஏதாவது உள்ளதா என அறிய விழையும் சிந்தனையின் சாயலை இருக்கும் சம்ஹிதையின் 'நாஸதீய' சூக்தத்திலும் யசுர் சம்ஹிதையின் கடைசி அத்தியாயத்திலும் காணமுடிகிறது. உலகம், உயிர் என்பன உண்மைப் பொருட்களே என அக்காலப் பகுதியில் நம்பப்பட்டமை இவற்றிற் புலனாகின்றது. காட்சிக்குப் புலனாகும் இவ்வுலகம் காணப்படாத ஏதோ ஒரு மூலப் பொருளினின்று உருவானது என்ற கருத்தும் இயற்கை நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றும் தெய்வ சக்திகளால் நிகழ்வன என்ற நம்பிக்கையும் இவற்றிற் புலப்படுத்தப்பட்டுள்ளன. நித்தியமான ஆன்மா மரணத்தின்பின் நரகம் அல்லது சுவர்க்கம் செல்வதாக நம்பப்பட்டமை தெரிகிறது.

இவ்வாறு வேத சம்ஹிதைகளில் தத்துவ சிந்தனைக்கான கருக்கள் காணப்பட்டபோதும் அவை முறையான தத்துவ வடிவத்தைப் பெறவில்லை. உபநிஷதங்கள் என்ற பிரிவில் அமைந்த நூல்களிலேயே அத்தகு தத்துவ வடிவத்தை அவதானிக்க முடிகிறது. வேதசாரம் எனவும் வேதாந்தம் எனவும் சுட்டப்படும் உபநிஷதங்கள் ஆசிரியரும் மாணவரும் அருகிருந்து உரையாடும் பாங்கில் அமைந்தவை. உபநிஷதம் என அவற்றுக்கு அமைந்த பெயரே அருகிருந்து உரையாடுவதன் மூலம் பெறப்பட்ட அறிவு எனப் பொருள் தந்து நிற்பதாகும். இவ்வுரையாடல்களிற் பெறப்பட்ட பல்வகைக் கருத்துக்களே இந்திய தத்துவப் பிரிவுகள் பலவற்றுக்கும் தோற்றுவாய் ஆயின.

நால்வகை வேதங்களுக்கும் எல்லாமாக 112 உபநிஷதங்கள் உள்ளன. இவற்றுள் முக்கியமானவை 13 ஆகும்.

அவை — ஈசம், சாந்தோக்யம், பிருகதாரண்யம், ஐதரேயம், தைத்ரீயம், பிரச்னம், கேநம், கடம் முண்டகம், மாண்டூக்யம், கௌஷீதகீயம், மைத்ராயணீயம், சுவேதாஸ்வதரம்.

இவை பொதுவாக கி. மு. 1000 முதல் 500 வரை எழுந்தன எனக்கருதப்படுவன. கி. மு. 700 — 100 காலப் பகுதியில் எழுந்தன என்ற கருத்தும் உண்டு. இவற்றில் ஈசம், சாந்தோக்யம் பிருகதாரண்யகம் ஆகிய மூன்றும் தொன்மையானவையாகும். சாந்தோக்கியம் அளவில் மிகப் பெரியதாகவும் உள்ளது. மைத்ராயணீயம், சுவேதாஸ்வதரம் என்பன கௌதமபுத்தர் காலமான கி. மு. 6ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவை எனக் கருதப்படுவன.

மேற்குறித்த உபநிடதங்கள் பெரும்பான்மையும் உரையாடல் முறையில் அமைந்தவை. ஆசிரியரிடம் மாணவரும் கணவனிடம் மனைவியும் தந்தையிடம் புதல்வனும் தத்தம் ஐயங்களைத் தெளிவுபடுத்திக் கொள்ள முயல்வதும் அரசவைகளில் அறிஞர் பெருமக்கள் நிகழ்த்திய விவாதங்களும் உபநிடத உரையாடல்களின் இயல்புகள் சாந்தோக்ய உபநிடத உரையாடல்களின் இயல்புகள் சாந்தோக்ய உபநிடதத்திலே 'ரைக்வர்', சத்யாகமஜாபாலர், உபகோசலர் ஆகியோரது உரையாடலும் முக்கிய இடம் பெறுகின்றன. பிருகதாரண்யக உபநிடதத்திலே ஜனகரின் சபையில் யாக்ஞவல்கியர் நிகழ்த்திய பெருவிவாதங்கள் முக்கிய இடம்பெறுகின்றன. கடோபநிடதத்திலே யமனுக்கும் நசிகேதனுக்குமிடையில் உரையாடல் நிகழ்கிறது. கௌஷீதகீய உபநிடதத்திலே இந்திரன் பிரதர்த்தன் என்ற அரசனுக்கு உபதேசிக்கிறான்.

மேற்படி உபநிடத உரையாடல்கள் விவாதங்கள் என்பவற்றிற்குப் பொருளாக அமைந்த விடயம் உடலையும் உலகத்தையும் இயக்கும் சக்தி பற்றியதாகும். உடலுள் நின்றியக்கும் சக்தி ஆத்மா, ஜீவாத்மா என்னும் பெயர்களாலும் உலகம் முழுவதையும் தோற்றுவித்து இயக்கி நிற்கும் சக்தி பிரமம், பரமாத்மா என்னும் பெயர்களாலும் சுட்டப்பட்டன. ஜீவாத்மாவைப் பிரக்ஞாத்மா எனவும் உபநிடதங்கள் வழங்கின. இவ்விரு இயக்கு சக்திகளின் (ஆத்மா, பிரமம் என்பவற்றின்) இயல்புகளை அறிந்து கொள்ளும் ஆர்வமே உபநிடத உரையாடல்களுக்கு அடிப்படையாயிற்று. நாரதர் சனற்குமார முனிவரிடமும் சுவேதகேது உத்தாலகரிடமும் நசிகேதன் யமனிடமும் மைத்ரேயியக்ஞவல்கியரிடமும் எழுப்புவனவாக அமைந்த வினாக்குள் பலவற்றிலும் இந்த ஆர்வமே முனைப்பாக அமைந்தது. அவ்வினாக்களுக்குக் கொடுக்கப்பட்ட விடைகளே இந்திய தத்துவ சிந்தனைகள் பலவற்றுக்குமான அடிப்படைகளாக அமைந்தன. நமது சரீரத்திலே புலன்களுக்கும் மனத்துக்கும் புறம்பானதாக ஆத்மா என ஒன்று உண்டு என்பதும் அதுவே நமது சரீரத்தை இயக்கிநிற்கும் சக்தி என்பதும் பொதுவாக உபநிடதங்கள் பலவற்றிலும் காணப்படும் கருத்து நிலையாகும். அதேபோல இந்தப் பரந்த பிரபஞ்சம் முழுவதும் பிரம்ம என்ற மூலப் பொருளினின்று உருவானதென்பதும் அதனாலேயே இயங்குகின்றதென்பதும் உபநிடதங்கள் பலவற்றிலும் வலியுறுத்தப்பட்டுள்ளன.

"வாள் உறையுள் இருப்பது போலவும் பறவைகள்
கூடுகளில் இருப்பது போலவும் பிரக்ஞாத்மா

இந்த உடலின் உரோமங்கள் வரை நிறைந்துள்ளது"
என கௌஷீதகீய உபநிடம் குறிப்பிடுகிறது.

"உடலின் ஒரு பகுதியில் கட்டைவிரலுக்குச் சமமான
இடத்தில் மிக நுணுக்கமாகவுள்ள இந்த ஆத்மாவைத்
தியானம் செய்பவன் முத்திநிலை எய்துகிறான்"
என மைத்ராயணீ உபநிடதம் குறிப்பிடும்.

பிரம்மத்தின் இயல்பைக் கேனோ உபநிடதம்.
"எதனைச் சொல்லால் விளக்க முடியாதோ எதிலிருந்து
சொல் பிறந்ததோ அதுவே பிரமம் என அறிக"
எனக் குறிப்பிடும். அப் பிரமமே யாவற்றுக்கும்
தோற்றக் காரணி என்பதை முண்டக உபநிடதம்.

"நிலத்தில் மூலிகைச் செடி முளைவிடுவது போலவும்
உடலில் மயிர் முளைப்பது போலவும் எல்லாப்
பொருளும் பிரமத்திலிருந்தே தோற்றம் பெறுகின்றன"
என்று உபமானமூலம் விளக்குகின்றது.

இவ்வாறு பிரமம் ஆத்மா ஆகிய இரு பொருட்களைப் பற்றி பேசும் உபநிடதங்களில் இவ்விரண்டும் இரண்டல்ல ஒன்றே என ஊகிக்கவும் ஒன்றின் இருநிலைகளே எனக் கருதிக்கொள்ளவும் தக்கவாக்கியங்களும் காணப்படுகின்றன.

"பல மரங்களின் பூக்களிலிருந்து பெறப்பட்ட தேன்கள்
ஒன்றானபின் இது இந்த மரத்தேன் எனப் பிரித்து நோக்க
முடியாதவாறுபோல மோட்சம் பெற்ற ஆத்மாவுக்கும்
பிரமத்துக்கு மிடையில் வேறுபாடில்லை."
என்பது சாந்தோக்ய உபநிடதத்திற் பெறப்படும் கருத்து.

"நதிகள் கடலிற் கலந்துதம் மறைந்து விடுவது போல
ஜீவன் பிரமத்திற் கலந்ததும் அதன் எல்லா
உருவங்களும் மறைந்து விடுகின்றன."
என பிருகதாரண்யக உபநிடதம் குறிப்பிடும்

"அந்தப் பிரம சக்கரத்திலே அன்னப் பறவை சுற்றித் திரிகிறது. அது பிரமஞானம் பெற்று அந்தப் பிரமத்திலேயே நின்று அமுதமயமான முத்தி அடைகிறது."

என்பது சுவேதாஸ்வதர உபநிடதக் கருத்து.

இத்தகைய கூற்றுக்கள் ஆத்மா பிரமம் என்பன இருவேறு பொருட்களாகக் கொள்ளப்பட்டாலும் அவை ஒரு குறித்த நிலையிலே ஒன்றேயாகி விடுகின்றன என்பதைப் புலப்படுத்தி நிற்பன. இவை தவிர உபநிடதங்களில் ஆங்காங்கே காணப்படும் மஹாவாக்கியங்கள் ஆத்மா பிரமம் ஆகியவற்றின் ஒருமையையே சுட்டுவனவாகப் பொருள் தந்து நிற்பன. 'தத்வமஸி'. 'சர்வம் கல்பிதம் பிரஹ்ம. என்பனவாகக் சாந்தோக்யத்தில் இடம்பெறும் மஹா வாக்கியங்களில் ஆத்மாவே பிரமம் என்பதும் எல்லாம் பிரமமயமே எனபதும் உணர்த்தப்பட்டுள்ளன. இவற்றைப்போலவே ஏனைய உபநிடதங்களிலே 'அஹம் பிரம் மாஸ்மி' (நானே பிரமமாக உள்ளேன்). 'சோஅகம் அஸ்மி' (அவன்—பிரமம்—நானாவே உள்ளேன்) என்ற பொருள்தரும் மஹா வாக்கியங்கள் உள்ளன.

இவ்வாறு உபநிடதங்கள் உடலையும் உலகையும் இயக்கும் சக்திகள் தொடர்பாக முன்வைத்த கருத்துக்களைக் குறிப்பிடத்தக்க சில அம்பங்களில் ஏற்றோ அல்லது மறுத்தோதான் இந்திய தித்துவப் பிரிவுகள் பலவும் உருவாயுள்ளன என்பது இந்திய தத்துவ சிந்தனை தொடர்பான ஆய்வுகளில் ஈடுபட்டோரது கருத்தாகும். குறிப்பாக மூவகை வேதாந்தங்களும் உபநிடதங்களின் தளத்தில் உருவானவையே என்பது வெளிப்படை. உபநிடதங்களின் சாராம்சமான பிரமசூத்திரத்திற்கு எழுதப்பட்ட உரைகளின் முரண்பட்ட நிலையே மூவகை வேதாந்த விரிவு என்பது தெளிவு. உலகாயதம் என்பது உபநிடதங்கள் சுட்டும் ஆத்மா. பிரமம் என்பவற்றை மறுப்பதன்மூலம் உபநிடதங்களுக்கு எதிர்நிலைத் தத்துவமாகின்றது. பௌத்தம் "எதுவுமே நிலையான உண்மைப்பொருள் அல்ல. கணந்தோறும் மாற்றம் பெறுவன" என்று சூனியவாதம் பேசுவதன்மூலம் உபநிடத சிந்தினைக்கு மறுப்பாக அமைகிறது. சமணம் சீவன் அசீவன் என உலகப்பொருட்களை இரு கூறாகக் காண்பது. சாஸ்சியம். யோகம் ஆகிய தர்சனங்கள் உலகப் பொருட்களைப் புருஷன்—பிரகிருதி என இரு கூறாக்குவன இவற்றின் பகுப்பு முறைகள் ஒரு வகையிலே உபநிடதங் கூறும் ஆத்மா. உலகம் எனபவற்றோடு பொருந்துவன. உபநிடதங்களின் பிரமம் பற்றிய கருத்து இவற்றில் இடம் பெறாமை ஒரு முக்கிய வேறுபாடு ஆகும். சுவேதாஸ்வதார உப நிடதத்திலே இறை. உயிர். இயற்கை ஆகிய முப்பொருளும் உண்மை எனப் பேசப்படுவதனால் விசிட்டாத்வைதம். துவைதம். சைவசித்தாந்தந்தம் மூன்றுக்குமான

அடிப்படைகளை இவைகொண்டுள்ளமை புலனாகும். இவை முப்பொருளுண்மை பேசுவன என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது. இவ்வுபநிடதம் ருத்ரனான சிவனின் மகிமை பேசப்படுவதனால் சைவ சித்தாந்தத்திற்கான சிறப்பான மூலாதாரங்களில் ஒன்றாக இதனைக் கொள்ள இடமுண்டாகிறது.

சாந்தோக்யம். கடம் ஆகிய உபநிடதங்களிலே ஆத்மாவின் மறுமைபற்றியும் பேசப்பட்டுள்ளது. நல்வினை தீவினை என்பவற்றுக்கேற்ப ஆத்மாக்கள் மறுபிறப்புக்களை எய்துவன என்பது சாந்தோக்கியத்திலே தெளிவாகப்பட்டுள்ளது. இந்திய மதங்களிலே சிறப்பாகப் பேசப்படும் 'கர்மம் மறுபிறப்பு'க் கோட்பாட்டிற்கு இவை மூலங்கள் ஆகின்றன.

இவை யாவற்றையும் நோக்கும் போது இந்திய தத்துவ சிந்தனைகள் பலவற்றுடனும் உபநிடதங்கள் உடன்பாடாகவோ அன்றேல் எதிர்மறையாகவோ உறவு கொண்டுள்ளமை தெளிவாகும். இந்திய தத்துவங்கள் பலவற்றுக்குமான மூலாதாரங்களாக இற்றைவரை அறியப்பட்டுள்ள நூல்கள் உபநிடதங்களின் காலத்துக்குப் பிற்பட்டவை என்பதால் உபநிடதங்களின் கருத்து நிலைகளை ஆதரித்தோ அல்லது சார்ந்தோ அன்றேல் எதிர்த்தோதான் இவை எழுந்திருக்கு வேண்டும் என்று இந்திய தத்துவ வியாலா் கருதுகின்றனர். இக்கருத்து நிலை இதுவரை முழுமையான ஆய்வுக்குட்பட்டதாகத் தெரியவில்லை. குறிப்பாக ஐவகைத் தரிசனங்கள் எனப்படுவன வைதிகதத்துவங்கள் என்ற வகையில் வேத உபநிடத சிந்தனைகளைச் சார்ந்தன என்றே கொள்ளப்பட்டுள்ளன. ஆனால் இவற்றுக்கும் உபநிடங்களுக்குமுள்ள உறவுநிலை போதிய ஆதாரங்கள்மூலம் இதுவரை எடுத்துக் காட்டப்பட்டதாகத் தெரியவில்லை இந்திய தத்துவ ஆய்வில் ஈடுபடுவோர் இதனைக் கவனத்திற் கொள்வார்களானால் உபநிடதங்களுக்கும் இந்திய தத்துவங்களுக்குமுள்ள தொடர்பு பற்றிய வரலாற்றில் தெளிவற்ற ஒரு பகுதி தெளிவுபெற வாய்ப்பு உண்டாகலாம்.



# எங்கள் இறைவா!
# அருள் செய்க

*மங்கைபங்கனே! அர்த்த நாரீஸ்வரா!*

மனிதர்களாய் இந்தப் பூமிக்கு வந்துள்ளோம். எங்கள் பிறப்புக்கு நாங்கள் காரணம் இல்லை. நீயேதான் எங்களை இங்கு பிறக்கவைத்தாய். மனிதர்களாகப் பிறப்பெடுக்கவைத்த உன்கருணைக்கு என்றும் எங்கள் வந்தனம் உண்டு.

அரியபிறவியை தந்தபெரியோனே! நாங்கள் அலைப்புற்று நிலைகுலைந்து அல்லல் படலாமா? எங்களுக்குள் எத்தனை போட்டிகள்? பூசல்கள் பிரிவினைகள் ஒருவரை ஒருவர் தூக்கிவிடவேண்டியவர்கள் தாக்கிவிடவும் தாழ்த்திவிடவும் துடிக்கிறோமே.

இறைவா!
அந்தத் துடிப்பை அடக்கி அருள்க! எம்மை ஒற்றுமையாய் வாழச்செய்க!

அன்புப் பிடிப்பை பாசப் பிணைப்பை தூண்டியருள்க! போகும் இடமெல்லாம் பூனைக்குட்டியை காவிச்செல்வது போல எங்களில் சிலர் குறைகளையும் குற்றங்களையும் சுமந்து செல்கிறார்கள் எமக்குவந்துள்ள துன்பச்சுமைகள் போதாதா? இன்னும் இன்னும் குறைகாணும் குற்றம்கூறும் குணங்களையும் நாம் சுமக்கவேண்டுமா?

எம்மை நிறைகாணும் திசைக்குத் திருப்பியருள்க! எங்கும் எதிலும் நிறைகண்டு திருப்தி கொண்டு வாழவும் வாழ்விக்கவும் அருள் செய்க!

எங்கள் வினைகள் எங்களைப் பூனைகள் ஆக்கலாம் எங்கள் இறைவா! நீ நினைத்தால் எங்களை யானை ஆக்கலாம்.
யானைகண்ட பூனை ஒதுங்கிக் கொள்ளு மல்லவா?
எங்கள் இறைவா! அருள் செய்க!

***— கனடா வாழ்சைவ மக்கள்.***

# நகரங்களும் ஆலயங்களும்

*டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர்*

நம்முடைய நாட்டினர் எந்தக் காரியத்தைச் செய்தாலும் தத்தமக்குரிய கடவுளை வணங்கித் தொடங்குதல் தொன்று தொட்டு வழக்கமாக இருக்கிறது. அவர்களுடைய தினசரி வாழ்வில் கடவுள் வணக்கமே முதற்கடமையாக உள்ளது. காவியங்களையும், கலைகளையும், தொழில்களையும் கடவுள் திருவருளை முன்னிட்டுக் கொண்டே வளர்ந்து வந்தார்கள். மிகவும் பழைய காலத்தில் இந்நாடு பெரும்பாலும் வனங்கள் நிரம்பியிருந்தது. அவ்வனங்களில் தெய்வங்களைப் பிரதிஷ்டை செய்து அங்கே உள்ள முனிவர்கள் முதலியோர் வழிபட்டு வந்தனர். இவ்வாறு வழிபட்டு வந்த இடங்கள் பிற்காலத்தில் காடு அழிந்து நாடானபோது அங்கிருந்து மரங்கள் முதலியன அழிந்தாலும் அவை காடாக இருந்தன என்பதற்கு அடையாளமாகிய பெயர்களும் பிற சின்னங்களும் இப்போதும் இருத்தலைக் காணலாம். இப்பொழுதும் தலங்களுக்குரிய விருட்சங்கள் தனியே உள்ளன. மனிதர் ஒருங்குகூடி வாழும் இடத்தில் தெய்வத்தைத் தலைமையாகக் கொண்டு வழிபட்டு வந்தனர் என்ற செய்தி பழைய நூல்களால் விளங்குகின்றது.

நாளடைவில் மனிதர்களுடைய ஒற்றுமையும் முயற்சியும் விரிய விரிய நகரங்கள் உண்டாயின. அத்தகைய நகரங்கள் பெரும்பாலான தெய்வத்தின் திருக்கோயிலை நடுநாயமாக வைத்து அமைக்கப்பெற்றன. "பரிபாடல்" என்னும் சங்க காலத்து நூலிலேயுள்ள ஒரு பாட்டில், மதுரையிலும் சிவபெருமானது திருக்கோயில் நகரத்துக்கு நடுநாயமாக அமைந்துள்ளதென்பது சொல்லப்பட்டுள்ளது. "மதுரையானது திருமால் திருவுந்தியில் உண்டான தாமரைப் பூவைப்போல இருந்தது. அம்மலரின் இதழைப்போல இருந்தன அதன் தெருக்கள். அவற்றின் நடுவே தாமரை மலரின் உட்கொட்டையைப் போல் ஆலயம் விளங்கியது" என்னும் பொருளையுடையது அப்பாட்டு.

நகர அமைப்பிலே கடவுளது ஆலயம் நடுவில் இருத்தல் வேண்டுமென்பது சிற்ப சாஸ்திரங்களிலும் சொல்லப் பெற்றதாகக் கூறுவர். இன்றும் மதுரை, ஸ்ரீரங்கம், திருவானைக்கா முதலிய நகரங்களில் இவ்வமைப்பைக் காணலாம். நகரென்னும் பெயருக்குக்

கடவுளது ஆலயம் என்றும், மனிதர் வாழும் பேரூர் என்றும் இரண்டு பொருள் உண்டு.

*"முக்கட் செல்வர் நகர்வலம் வரற்கே"*

"என்பது புறநானூறு என்னும் பழைய நூலிற்காணும் ஒரு செய்யுட் பகுதி. அதன்கண் நகர் என்னும் சொல் கோயிலைக் குறிக்கின்றது. கோயில் என்னும் தமிழ்ச் சொல் தலைவனது இருப்பிடம் அல்லது தலைமையான ஆலயம் என்னும் பொருளுடையது. அச்சொற்பொருள் ஆலயம் ஒரு நகரத்திலே தலைமை பெற்று விளங்குதற்குரியது என்பதை விளக்குகிறது.

*"ஊரானோர் தேவகுலம்"*

என்னும் பழைய வாக்கியம் ஊர் இருக்கும் இடந்தோறும் கோயில் இருக்க வேண்டிய அவசியத்தைக் குறிக்கின்றது. ஆலயம் இல்லாத ஊர் எவ்வளவு அழகுடையதாயினும் அது லட்சுமிகரம் அற்றது என்றே பெரியோர் கொண்டனர்.

"கோயிலில்லா ஊரில்
குடியிருக்க வேண்டாம்"

என்று உலகநீதி கூறுகிறது. கடவுளை மனம், வாக்கு, காயம் என்னும் முக்கரணங்களாலும் வழிபட வேண்டும். மக்களுக்கு அன்பு உண்டாக உண்டாக அவர்கள் வழிபாடு வரவரச் சிறப்பை அடையும். உடம்பால் வணங்குபவருக்கு அன்பு மிகமிக அவர்கள் வாக்கால் வாழ்த்துதல் அதிகமாகும். பின்பு அன்பு அதிகமாக ஆக அவர்கள் மனத்தினால் வழிபடும் தியானம் வலிமை பெறும். இம்மூவகை வழிபாட்டிலும் உடம்பால் வழிபடுதல் எல்லோராலும் செய்தற்குரியது. தெய்வ பக்தியின் முதற்படி அவ்வணக்கமே ஆகும்.

எல்லாச் சமயத்தார்க்கும் பொதுமறையாக நூலியற்றிய திருவள்ளுவர். "கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான் தாளை வணங்காத் தலை" என்று கூறுகின்றனர். இங்கே கடவுளுக்கு உடலால் செய்யும் வழிபாட்டை அவர் உரைத்தார். கடவுளுக்கு உருவம் அமைத்து அதனை வணங்கும் வழக்கத்தை மனத்துட்கொண்டே இதனை அவர் இயம்பினாரென்று கொள்ள வேண்டும்.

***தொடரும்.....***

# மணிக்கரங்கள்

ஆலயமணி சமய சஞ்சிகையின் தேவையும் பார்வையும் பல சைவத்தமிழ் அன்பர்களை அதன் அபிமானிகள் ஆக்கியிருப்பதை யறிந்து மகிழ்ச்சியடைகிறோம். ரொறன்ரோவிலும் மொன்றியாலிலும் எம்மைக்கண்டவர்கள் தங்கள் அபிப்பிராயங்களைத் தெரிவித்துப் பல ஆலோசனைகளையும் வழங்கினார்கள் முடிந்த அளவு ஆதரவு தருவதாகச் சொன்னார்கள்.

விளம்பரங்கள் அதிகமில்லாமல் விடய தானங்களை வெளியிட்டு சைவத்தமிழ் பாரம்பரிய ஒழுக்கங்களையும் விழுமியங்களையும் வளர்க்கும் படி வேண்டினார்கள் சஞ்சிகையின் தயாரிப்புச் செலவுகள் குறித்துப்புதிய யோசனைகளைத் தெரிவித்தார்கள்.

அதிலே முதன்மையானது ஒவ்வொரு இதழ் செலவுக்கும் தம்மால் இயன்ற உதவியை செய்வதென்பதாகும் அந்த உதவிக்கரங்களை நாம் மணிக்கரங்களாய் வரவேற்று எங்கள் கரங்களால் வணங்குகிறோம். வணக்கம் தானே எங்கள் வாழ்க்கையின் முதல் பணி.

ஒரு சிவாச்சாரியாரும் ஒரு சிவ நெறியாளரும் இந்த இதழிலே அறிமுகமாகிறார்கள். இவர்களுக்கு ஆலயமணியின் நல்வாழ்த்துக்கள் என்றும் உண்டு. இவர்களைப் போல் இன்னும் பலர் ஆலயமணியின் வருகைக்கு உதவி ஊக்குவிக்குமாறு பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன்.

இதோ அந்த மணிக்கரங்களின் மனிதர்கள்

***சிவஸ்ரீ ஸ்ரீநிவாச சர்வானந்தக்குருக்கள்***
***(ரொறன்ரோ)***

***திருமிகு வேலாயுதபிள்ளை***
***றமேஷன்***
***(மொன்றியால்)***

இப்பட்டியலில் இன்னும் பல மணிக்கரங்கள் இணையவேண்டி மாதொரு பாகனைப் பிரார்த்திக்கின்றேன்.

***சிவ — சிவமோகன்***
***(கனடா பதிப்பாசிரியர்)***

உ

# மணி ஓசை — 2

## ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே........

நன்றி ஓம்! நமச்சிவாய...!

ஆலயமணி வெளியீட்டு விழா 18.09.1994 ஞாயிற்றுக்கிழமை மாலை கனடா சென்கிளையர் அவன்யூவில் அமைந்துள்ள ஜிம் மண்டபத்திலே திருவருள் துணையோடு இனிதே நடந்து நிறைவெய்தியது.

இவ்விழாவிற்குத் தலைமைதாங்கிய கவிஞர் வி. கந்தவனம் அவர்கட்கும் வெளியீட்டுரை நிகழ்த்திய சட்டத்தரணி எஸ். கே. மகேந்திரன் அவர்கட்கும். திருமுறைகளை ஓதிய சோம. சச்சிதானந்தன் அவர்கட்கும், வரவேற்புரை நிகழ்த்திய சோம. செந்தில்முருகன் அவர்கட்கும். வாழ்த்துப்பா இசைத்த கவிஞர் நல்லையூரன் அவர்கட்கும் எமது நன்றியை தெரிவித்துக்கொள்கின்றோம்.

இவ்விழாவிலே ஆசியுரை வழங்கியருளிய சிவஸ்ரீ தியாகராஜக் குருக்கள் கணேஸ் சுவாமிகள், சிவஸ்ரீ பஞ்சாட்சர கிருஷ்ணராஜக் குருக்கள், ஸ்ரீநிவாச சர்வானந்தக் குருக்கள், சிவஸ்ரீ பஞ்சாட்சர வி ஜயகுமாரக் குருக்கள், சிவஸ்ரீ ஸ்ரீநிவாச சர்வானந்தக்குருக்கள், சிவஸ்ரீ சுவாமிநாதசோமேஸ்வரக் குருக்கள், சிவஸ்ரீ தியாகராஜ முருகானந்தசர்மா ஆனியோருக்கும்

சிறப்புப் பிரதிகளைப் பெற்று ஆலய மணியின் வளர்ச்சிக்குதவிய திரு. ந. செல்வராஜா, திரு. ஏ. எம். மாணிக்கவாசகர், கவிஞர். நல்லையூரான், திரு. ப. இந்திரகுமார், திரு. எஸ். கனகலிங்கம் ஆகியோருக்கும்.

சிறப்புரைகளை வழங்கிய திரு. என். சிவலிங்கம், திரு. கே. வெங்கட்ராமன், திரு. எஸ். திருச்செல்வம், திரு. ஆர். என். லோகேந்திரலிங்கம், திரு. வ. ஞானகாந்தன் ஆகியோருக்கும்.

இவ்வெளியீட்டு விழாவிலே திருமதி மீனாம்பிகை தவரட்ணம் அவர்களுக்கும் புலவர் வழங்கிய சிவசமயச் செல்வி என்னும் பட்டம் பொறிக்கப்பட்ட தங்கப் பதக்கத்தினை திருக்கேதீஸ்வரம் திருவாசக மடத்தின் தலைவர் திரு. சரவணமுத்துச் சுவாமிகள் வடமானில முன்னாள் கல்விப்பணிப்பாளர் திரு. மாணிக்கவாசகரின் துணைவியாா திருமதி ஞானாம்பிகை அவர்களிடம் கையளிக்க அவர் திருமதி மீனாம்பிகைக்கு அணிவித்துக் கௌரவித்தார். இவர்கள் அனைவருக்கும்.

சிவாச்சாரிய திலகங்களுக்கு ஆலயமணியின் சார்பில் மாலை அணிவித்த கல்விப் பணிப்பாளர் மாணிக்கவாசகர் அவர்கட்கும்.

விழா மண்டபத்தினை ஒழுங்கு செய்துதவிய பஞ்சாட்சர விஜயகுமாரக்குருக்கள் அவர்கட்கும், ஒலிபெருக்கியை இலவசமாக அமைத்து உதவிய **V. M. T** இலி அமைப்பு நிர்வாகிகள் தில்லையம்பலம் மோகனதாஸ், தம்பிஐயா முருகதாஸ் ஆகியோருக்கும்.

விழா சிறப்புற நடைபெறுவதற்கு ஒத்துழைப்பு வழங்கிய திருவாளர்கள் பூபால கெங்காதரன், சேது — சிவா, இரா. ரவீந்திரன், பொன். இளங்கோவன், சோம. சந்திரலோகன், கனக — சொல்லானந்தம் ஆகியோருக்கும்.

ஆலயமணி அமைச்சின் சார்பாக நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். இவர்கள் அனைவரும் மீனாட்சியோடுறை சோமசுந்தரேசப் பெருமான் திருவருளால் எல்லா நன்மைகளும் பெற்று வாழப் பிரார்த்திக்கிறேன்.

விழாவுக்கு வருகை தந்த பெருந்தகைகளுக்கும் எமது நன்றிகள்.

***18.10.94***

**சிவ — சிவமோகன்**
**(பதிப்பாசிரியர்)**